வெளியீடு எண் 24.

உ

குருபாதம்

# இந்துமத பாலபாடம்

இந்நூல்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம்

இருபத்தைந்தாவது மகாசந்நிதானம்

**ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளவர்கள்**

திருவுள்ளப்பாங்கின்படி

வெளியிடப்பெற்றது.

மூன்றாம் பதிப்பு

ஆசிரியர் :

நாகர்கோயில், பண்டிதபூஷணம்,

**திரு. கே. ஆறுமுகநாவலர் அவர்கள்.**

**1953.**

பட்டுள்ளன. ஆலயவழிபாட்டின் முறையும், நித்திய கரும விதிகளும், சில ஒழுக்கமுறைகளுங்கூட விளக்கமாகத் தரப்பட்டுள்ளன. இறுதியில் ஒவ்வொருசந்நிதியிலும் சொல்லவேண்டிய திருப்பாடல்களும் சேர்க்கப்பட்டிருக்கின்றன.

இத்தகைய சிறந்த இந்நூல், 1937-ல் இருபத்து நான்காவது மகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் ஆணையின்படி, தருமையாதீன வித்வான், திரு. கா. ழி. சிவ. கண்ணுசாமி பிள்ளை B. A., அவர்களால் பார்வையிடப்பட்டு முதற் பதிப்பாக வெளிவந்தது.

காலநிலைகருதி அதற்குத்தேவையான பணி இது என அறிந்து, சமயப்பிரசார வாகனம் ஒன்றமைத்து கிராமங்கள்தோறும் அனுப்பி, ஆங்காங்கும் அறிஞர்களைக்கொண்டு சமயச்சொற்பொழிவுகள் நிகழ்த்துவித்துச் சமயவளர்ச்சிக்கு ஆவனசெய்துவரும் இருபத்தைந்தாவது மகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் திருவுள்ளப்பாங்கின்படி இப்பொழுது இந்நூல் மூன்றும் பதிப்பாக வெளிவருகின்றது.

அன்பர்கள் பெற்றுப் படித்து உண்மையுணர்ந்து ஒழுகி உய்வார்களாக.



சமயப்பிரசார வாகன வெள்ளோட்ட ஆரம்ப விழா.




மூர்த்தி அம்பலக் கூத்தனது உருவே

—குமரகுருபரர்



உ

குருபாதம்

# இந்துமத பாலபாடம்

## 1. கடவுள்

### 1. கடவுள் என்ற பதத்தின் பொருள் யாது?

கடவுள் என்ற பதம் கட என்னும் பகுதியும் உள் என்னும் தொழிற்பெயர் விகுதியும் பெற்றது. செய்யுள் என்பது செய்தல் என்று பொருள்படுவது போல, கடவுள் என்பதும் கடத்தல் என்று பொருள் படும். ஆகவே கடவுள் என்பவர் எல்லாவற்றையும் கடந்து நிற்பவர் என்பதாயிற்று.

### 2. கடவுள் ஒருவர் உண்டா? அவர் உண்டு என்று நம்புவது எப்படி?

ஒரு பொருள் உண்டென்று நம்புவதற்குப் பிரத்தி யட்சப்பிரமாணம், அனுமானப்பிரமாணம், ஆகமப்

என்னும் தேவாரத்தால் நன்கு விளக்கியுள்ளார்கள். வாயுவை நமக்குக் கண்ணால் காணமுடிகிறதா? மின் சாரத்தைக் கண்ணால் காணமுடிகிறதா? நமது கண்ணுக்குக் காணமுடியாததால் அவையில்லையென்று நாம் சொல்லமுடியுமா? அவை செய்யும் வேலைகளைக்கொண்டு அவை உண்டென்று எப்படி நம்புகிறோமோ, அப்படியே கடவுளின் ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய தொழில்களைக்கண்டு அவர் உண்டு என்பதை அறிந்துகொள்ளவேண்டும்.

### 5. கடவுள் என்று ஒருவர் வேண்டுமானால் இருக்கட்டும்; அவரைப்பற்றி நமக்குக் கவலை ஏன்?

குளிரால் நடுங்கும் மனிதர்களுக்குக் குளிர் மாற்றுவதற்காக எரிந்துகொண்டிருக்கும் தீச்சுடர் போலவும், பாலைவனங்களைக் கடந்து செல்பவருக்குத் தங்கி இளைப்பாற உதவும் 'ஓயஸிஸ்' (Oasis) என்று சொல்லப்படும் நிழல் தண்ணீர் உணவுப்பொருள் முதலியவற்றையுடைய இடம்போலவும், இனிய பழங்களையும் குளிர்ச்சியினையும் கொண்டு, வந்தடைந்தார்க்குக் கொடுக்கக் காத்துநிற்கும் மரம் போலவும் கடவுள் இருக்கிறார். தீவினை, பிறவிநோய் முதலியவற்றால் துன்புற்ற உயிர்களின் துன்பத்தை நீக்க அவர் காத்திருக்கின்றார். வேண்டியவர்கள் அவரையடைந்து அதனை மாற்றிக் கொள்ளலாம். அவரையன்றி அதனையகற்ற வேறெவராலும் ஆகாது. தீக்காய்பவனுக்கு உதவும் தீயினுக்கு, ஒருவன் தன்னையடைவதால் நலமேனும் நட்டமேனும் இல்லாததுபோல, நாம் இறைவனை அடைவதால்

அவருக்கு நலமேனும் நட்டமேனும் இல்லை. ஆனால் நமக்கோ தீக்காயும் மனிதனையொப்ப நலமும், தீ இருந்தும் காயாத மனிதனையொப்ப நட்டமும் உண்டு. ஆதலால், கடவுளை நம்பி அவரையடைய முயன்று, பிறவிநோயென்னும் பெருநோயை அகற்றிக்கொள்ள வேண்டியது ஆறறிவுடைய மனிதனின் அறிவுடைய செயலாம்.

**6. உயர்பநமடைய நல்லொழுக்க வாழ்க்கை உறுதுணையாயிருக்க, கடவுட் கொள்கையின் அவசியமென்ன ?**

ஒருவன் நல்லொழுக்கமுடையவனாய் இருப்பதற்கு உள்ள காரணமென்ன? எதைக்கருதி? இரவு நடுச்சாம வேளையில், தன் வீட்டில் வேறு துணையின்றித் தங்கியிருக்கும் ஒருவனைக் கொலைசெய்து இலட்சக்கணக்காய் அவன் கையிலிருக்கும் பொருளைத் திருடிக்கொண்டால் என்ன குற்றம்? தன் பழிச்செயலை வேறெவரும் அறியவில்லை; அவமானமும் இல்லை; தன் குடும்பத்தாரும் அதனால் மிகுந்த இன்பம் அனுபவிக்கலாம். இவ்வளவிருந்தும், தான் செய்யும் குற்றத்தை எவரும் அறியாது போனாலும், எல்லாவற்றையும் உணரும் இறைவன் அதனையறிந்து தக்க தண்டனை விதிப்பான் என்பது கருதியன்றோ அது செய்யாதொழிகின்றான் ; எனவே, கடவுள் நம்பிக்கையிருந்தால்மாத்திரமே மக்களிடம் நல்லொழுக்கம் மிகும் என்பது விளங்குகின்றது. கடவுள் நம்பிக்கையின்றேல் எத்தகைய தீய செயலும் செய்யும் இடம் மிகுந்து தீமை பல விளையும். ஆதலால்,

இப்பாட்டின்கட் போந்த சொற்களுக்கெல்லாம் பொருள் பொருட்பாகுபாட்டிற் கூறியிருப்பினும் இச் சொற்கு இதுவே பொருள் என ஐயமறத் தெளிதற் பொருட்டு, அருஞ்சொற்களையெல்லாம் அகரவரிசைப்படுத்தி அவற்றிற்கெல்லாம் பொருள் எழுதியுள்ளேன். நூலாசிரியர் இச்சொல்லை இப்பொருளிற்றான் வழங்கியுள்ளாரெனத் தெளிதற்பொருட்டு இச்செய்யுள் உண்டான காலத்தும் அதற்கு முன்பின்னுமடுத்துவந்த காலத்தும் வழங்கிய நூல்களிலிருந்து மேற்கோள் காட்டியிருக்கின்றேன்.

நந்தாய்மொழியின் அருமை பெருமைகளைத் தமிழகத்தாரறிந்து அதன்கண் அவாமிக்கு, அதனை நன்கு பயில விரும்புமாறு செய்தலால் நந்தாய்மொழிக்குத் தொண்டாற்றும்பேற்றைப் பெறலாமென விழைந்த யான் அதனைப் பெறுதற்குத் தகுதியில்லேனாய் வைத்தும் 'ஆசை வெட்கமறியாது' என்னும் பழமொழிப்படி அவ்வழியிற் றொண்டாற்றத் தொடங்கி, பழந்தமிழ் நூல்களுள் முதன்மையவாகிய பத்துப் பாட்டுக்களையும் ஆராய்ச்சியுரையுடன் வெளியிட முயன்றேன். அங்ஙனம் முயன்ற எனக்கு உயர்திரு. மறைமலையடிகள் அவர்கள் வெளியிட்டுள்ள முல்லைப்பாட்டாராய்ச்சியுரையும் பட்டினப்பாலை ஆராய்ச்சியுரையும் முனைமாதிரியாகவும் பெரும்பொருளாகவும் புலப்பட்டன. இன்னுமவர்கள் வெளியிடுவதற்கு எழுதி வைத்திருப்பனவாகக் குறிப்பிட்டுள்ள குறிஞ்சிப் பாட்டு ஆராய்ச்சியுரையும், மலைபடுகடாம் ஆராய்ச்சியுரையும் எனது விழைவிற்குப் பெரிதும் துணை புரிவனவாகும். ஆகவே பத்துப் பாட்டுக்களுள் முதற்கண்ணதாகிய திருமுருகாற்றுப் படையை ஆராய்ந்து சில மாசங்களுக்குமுன் எழுதி வெளியிட்டேன். அதனைப் பல

முதலியனவாம். இவற்றுள் இந்து மதம் சைவம், வைணவம், காணாபத்தியம், வைரவம், கௌமாரம், வாமம் என்னும் பிரிவுகளையுடையது.

## 10. இந்துமதம் என்பதின் பொருள் என்ன

"இந்திய நாட்டினரின் மதமாதலால் இந்துமதம் என்று அழைக்கப்படுகிறது" என்று சிலர் கூறுகிறார்கள். "சிந்து நதிக்கரையில் ஆரியர்கள் தங்கியிருந்ததனால் அவர்கள் இந்துக்கள் எனப் பெயர்பெற்றனர்" என்றும் வேறுசிலர் கூறுவர்.

ஒரு நாட்டின் பெயரினையோ, ஓர் ஆற்றின் பெயரினையோ கொண்டு விளங்குவது இந்துமதமெனின் தெய்விக மதமாகிய இம்மதத்திற்கு அப்பெயர் சிறிதும் ஒவ்வாது. சிலர் இந்துக்களை அஞ்ஞானிகள் என அழைக்கிறார்கள். அஞ்ஞானிகள் என்பதற்கு ஞான மில்லாதவர்கள் அல்லது மூடர்கள் என்பது பொருள். இதுவும் பிசகு. பின் இதன் பொருள்தான் என்ன வெனின் கூறுவோம்.

हिंसायां दूयते यस्सः ।
हिन्दुरित्यभि धीयते ॥

என்பது உபநிஷத்து வாக்கியம். இதன் பொருள், ஹிம்சை என்பதில் எவன் துன்பப்படுகிறானோ அவன் ஹிந்து என அழைக்கப்படுகிறான் என்பதாகும். அதாவது, பிறவுயிர் வருந்துவதைக் கண்டு துன்பப் படுகின்றவனே இந்து என்பதாம். "மன்னுயிர்தம் பரா

பரன்றன் சந்நிதியதாகும்; இலங்கும் உயிர் உடலனைத்தும் ஈசன் கோயில்" எனக்கொண்டு எவ்வுயிரிடத்தும் அன்பு செலுத்தவேண்டும் என்பதை அடிப்படையாகக் கொண்ட மதமே இந்து மதம் எனப்படும். அன்பு வேறு, கடவுள் வேறு என்பது அறிவிலார் சொல். அன்பே கடவுள். ஆகவே, **இந்துமதம் என்பதற்கு அன்பு மதம் என்பது பொருள்.**

### 11. இந்துமதப் பெருமைகள் யாவை ?

(அ) இது மற்ற மதங்களுக்கெல்லாம் காலத்தால் முந்தியது. "இவ்வுலகிலுள்ள மத நூல்களில் மிக முந்தினது ஹிந்துமத ரிக்வேதமே" என்பது பண்டிதர் **மாக்ஸ்முல்லர்** கொள்கை.

(ஆ) வேறு மதங்கள் பலவும் அவ்வம்மதங்களை உண்டாக்கினவர் பெயரைக்கொண்டு விளங்க, இந்து மதத்தின் பிரிவுமதங்கள் ஒவ்வொன்றும் கடவுளின் பெயரைக்கொண்டே விளங்குகின்றன.

(உ—ம்) சைவம்—சிவத்தையடையும் மார்க்கம்.
வைணவம்—விஷ்ணுவையடையும் மார்க்கம்.

சிவம் என்னும் சொல்லுக்குப் 'பேருஞ்சுகம்' என்பது பொருள் எனக் கிறிஸ்தவ நூலாகிய **வேதபாரவணியிலும்** கூறப்படுகின்றது. இன்னும் 'மங்களம்' 'நன்மை' எனவும் பொருள்கள் உண்டு.

(இ) "முத்தியடைவதற்கு ஏற்ற மதம் எங்கள் மதமே" என யானைகண்ட குருடர்போல் தாம் கண்டதே முடிபு எனக் கூக்குரலிடாது, எப்பொருளைக்கொண்டு எங்கு நின்று வழிபடினும் அவையனைத்தையும் இறைவன் ஏற்றுக்கொள்கிறான் என்ற சமரசக் கருத்தினை வெளியிடுகிறது.

'யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வ மாகி யாங்கே
மாதொரு பாகனார்தாம் வருவர்'.

-சிவஞான சித்தியார்.

(ஈ) பதி, பசு, பாசம் என்ற முப்பொருள் உண்மையைக் கொண்டது.

(உ) ஆண் பெண் தன்மையை இறைவனிடம் காட்டிப் பெண்மையை இகழாது உயர்த்திக் கூறுவது.

(ஊ) ஆண்டான் — அடிமை அல்லது தாஸ மார்க்கம், தந்தை—மகன் அல்லது சத்புத்திர மார்க்கம், தோழன்—தோழன் அல்லது சகமார்க்கம், தலைவன்—தலைவி அல்லது சன்மார்க்கம் என்ற முறைகளில் கடவுள் வணக்கத்தை இயல்புக்கும் தகுதிக்கும் ஏற்ப உலகுக்கு வகுத்துக்காட்டுவது.

(எ) ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மல முறையை விளக்குவது.

(ஏ) இருபத்துநான்கு தத்துவங்களோடு பிற மதங்கள் நிற்ப, இது முப்பத்தாறு தத்துவங்களைக் கொண்டு விளங்குவது.

(ஐ) அருவ உருவ அருவுருவத் திருவுருவங்களாக இறைவனை வழிபடச்செய்வது.

(ஒ) எல்லா மதங்களையும் அவற்றின் முடிபுகளையும் தன்னுள் அடக்கிக்காட்டி ஒரு மதத்தையும் இகழாமல் அவற்றிற்கு மேலும் திகழ்ந்து விளங்குவது.

(ஓ) திருக்கோயில் வழிபாடு, நித்திய கர்மம் முதலியவற்றால் உடலையும் மனத்தினையும் தூய்மையாக்கி மனோவாக்குக் காயத்தினையெல்லாம் கடவுள் வணக்கத்தில் ஈடுபடுத்தி மக்களை மாயையினின்றும் அகலச்செய்வது.

(ஔ) முத்தி நிலையை உலகியல் இல்லொழுக்க இன்பத்தோடு இணைத்து மேற்செல்ல வழிகாட்டுவது.

(க) இல்லறத்தாலும் துறவறத்தாலும் இறைவனையடையலாம் என்று கூறுவது.

(கா) மனிதர்களைக் கட்டுப்பாட்டுக்கு உட்படுத்தாது சுதந்திரத்துடன் இறைவனை வழிபடச்செய்வது.

(கி) நாஸ்திகன் முதல் திவ்யஞானிவரை தன்னில் இருப்பதற்கு இடம் கொடுப்பது.

(கீ) பெரியோர் பிறப்பு அல்லது திருஅவதாரங்கள் என்றென்றைக்கும் உண்டு எனக் கூறுவது.

"ஓதுசமயங்கள் பொருள் உணரு நூல்கள்
ஒன்றோடொன்று ஒவ்வாமல் உளபலவும் இவற்றுள்
யாதுசமயம் பொருணூல் யாதுஇங்கு என்னில்
இதுவாகும் அதுஅல்லது எனும் பிணக்கது இன்றி
நீதியினால் இவையெல்லாம் ஓரிடத்தே காண
நின்றதுயா தொருசமயம் அதுசமயம் பொருணூல்
ஆதலினால் இவையெல்லாம் அருமறையா கமத்தே
அடங்கியிடும் அவையிரண்டும் அரனடிக்கீழ் அடங்கும்"
— சிவஞான சித்தியார்.

மேற்பாடங்களில் இவை விளக்கப்பட்டுள்ளன. இன்னும் பெருமைகள் பல இருக்கின்றன. இப்பெருமைகளைப் பலமதப் பாதிரிகளும் நிறைந்திருந்த அமெரிக்கா தேசத்துச் சிக்காகோ 'சர்வமத மகாசபை' யில் நம் **விவேகானந்தர்** எடுத்துக்காட்டியபோது **"உலகில் உயர்ந்த மதம் இந்துமதமே"** என அனைவரும் உணர்ந்தனர். அதுபற்றிய அபிப்பிராயங்களில் சில அடியில் கூறப்படுகின்றன.

"நியூயார்க் தூதன்" (New York Herald) என்ற பத்திரிகை 'சர்வமத மகாசபையில் பேசியவர்களில் விவேகானந்தரே மிகவும் சிறந்தவர் என்பதற்குச் சிறிதும் சந்தேகமில்லை. அவர் பேசியதைக் கேட்டபிறகு இந்துக்களுக்கு உபதேசிக்க இங்கிருந்து பாதிரிகளை அனுப்புவது பெரும் முட்டாள்தனம் என விளங்குகிறது' எனக் கூறியிருக்கிறது.

வேறொரு பத்திரிகை 'ஒவ்வொரு கிறிஸ்துவச் சர்ச்சிலிருந்தும் பிஷப்புகளும் உபதேசியார்களும் இங்கு

வந்திருந்தார்கள். அவர்களெல்லோரும் விவேகானந்தரின் பிரசங்கமாகிய வஜ்ராயுதத்தின் முன் நிற்கமாட்டாது விழுந்துவிட்டார்கள்' என்று கூறுகிறது. இன்னும் சில பத்திரிகைகளும், தலைவர்களும், அறிஞர்களும் இந்துமதத்தையும் சுவாமிகளையும் புகழ்ந்து கொண்டாடினார்கள். ஆயிரக்கணக்கான மேல்நாட்டார் இவருக்குச் சிஷ்யர்களாகி இந்துமதத்தை ஒட்டி நடந்தார்களென்றால் இம்மதத்தினுண்மைகள் சுவாமிகளைப்போன்ற தகுதியுடையவர்களால் தக்க முறையில் எடுத்துச் சொல்லப்படுமானால் இப்பூவுலக அறிஞரனைவரும் இந்துமதத்தையே மேற்கொள்ளுவார்கள் என்பதற்குச் சந்தேகமில்லையென்பது வெள்ளிடைமலைபோல் விளங்கும்.

## 3. கடவுள் திருவுருவம்

**12. அரூபியாகிய கடவுளை இந்துக்கள் ஏன் ரூபியாக வணங்குகிறார்கள் ?**

கடவுள் அரூபியென்பதை இந்துக்களும் ஒத்துக் கொள்ளுகிறார்கள். ஆனால் கடவுள் அரூபியாக மட்டிலுந்தான் இருப்பார் என்று சொல்பவர்களிடம் "அரூபியாகிய கடவுளுக்கு ரூபத்தோடு வரமுடியுமா?" எனக் கேட்டால் என்ன விடை கூறுவார்கள்? "முடியும்" என்பாரானால் உருவமாக வணங்குவதும் சரியென்றாயிற்று; "முடியாது" என்பாரானால் எல்லாவல்லமையும்

உள்ள கடவுளுக்கு உருவத்தோடு மட்டிலும் வரமுடியாது' என்பது எத்துணை அறிவீனம்? எல்லா வல்லமையுடைய இறைவன் எவ்வகை உருவத்தோடும் அருள்புரிவதற்கு ஆற்றல் உடையவனுயிருக்க, முடியாது எனக்கூற நமக்கு என்ன உரிமையுண்டு? ஆகவே சர்வ சக்தன் எவ்வித உருவமாகவும் அருள்புரிவான் என்பது விளங்கிற்று.

**13. கடவுள் திருவுருவங்கள் எவை ?**

அருபம், ரூபாரூபம், ரூபம் என்ற மூன்றுமாம்.

**14. அவர் அரூபியாயிருக்கும்போது எப்பெயர் பெறுவர் ?**

சிவம், சக்தி, நாதம், விந்து என நான்குவிதப் பெயர் பெறுவர்.

**15. அவர் ரூபாரூபியாயிருக்கும்போது எப் பெயர் பெறுவர் ?**

சதாசிவம் எனப் பெயர்பெறுவர்.

**16. அவர் ரூபியாயிருக்கும்போது எப்பெயர் பெறுவர் ?**

மகேசன். உருத்திரன், மால், அயன் என நான்கு விதமான பெயர்பெறுவர்.

இது அடியிற்கூறும் பாட்டாலும், படத்தாலும் நன்கு விளங்கும்.

" சிவம், சக்தி, நாதம், விந்து; சதாசிவன்; திகழு மீசன்
உவந்தருள் உருத்திரன்தான், மால், அயன்; ஒன்றின் ஒன்றாய்ப்
பவந்தரும் அருவம் நாலிங்கு, உருவம் நாலுபயம் ஒன்றாய்
நவந்தரு பேதம் ஏக நாதனே நடிபபன் என்பர்."

— சிவஞானசித்தியார்.




**17. இந்துக்களுக்கு மும்மூர்த்திகளாகிய மூன்று கடவுள் உண்டா?**

ஒருவர் ஓரிடத்தில் தாசில்தார், மாஜிஸ்ட்ரேட், முன்ஸிப் ஆகிய மூன்று வேலைகளையும் பார்த்துவருகிறார் என்று வைத்துக்கொள்வோம். அவர் ரெவின்யூ காரியம் பார்க்கும்போது தாசில்தார் எனவும், கிரிமினல் நடவடிக்கை நடத்தும்போது மாஜிஸ்ட்ரேட் எனவும், ஸிவில் நடவடிக்கை நடத்தும்போது முன்ஸீப் எனவும் பெயர்பெறுகிறார். முத்தொழிலுக்கும் முப்பெயர் பெறுபவர் ஒருவரே. அதுபோல ஆக்கல் அளித்தல் அழித்தல் ஆகிய முத்தொழில்களை நடத்தும்போது ஏகநாயகனே

முப்பெயர் பெறுகிறான். **திருஞானசம்பந்தப் பெருமான்** இதனை,

> 'ஒருரு வாயினை மானாங் காரத்து
> ஈரியல்பாய்ஒரு விண்முதல் பூதலம்
> ஒன்றிய இருசுடர் உம்பர்கள் பிறவும்
> படைத்தளித் தழிப்பமும் மூர்த்திகளாயினை'

எனவும், **அப்பர்பெருந்தகை,**

> 'ஒருருவே மூவுருவம் ஆன நாளோ'

எனவும், **நம்மாழ்வார்,**

> 'ஒளிமதி வண்ணன் என்கோ; ஒருவன் என்றேத்த நின்ற
> நளிர்மதிச்சடையன் என்கோ; நான்முகக்கடவுள் என்கோ'

எனவும், **சேரமான்பெருமாள் நாயனார்,**

> 'அரியாகிக் காப்பான்; அயனாய்ப் படைப்பான்;
> அரனாய் அழிப்பவனுந் தானே'

எனவும், பிறவும் பல பெரியோர்கள் கூறியிருக்கிறார்கள். எனவே எல்லாமல்ல கடவுள் ஒருவரே என்பதும் அவரே பல தொழில்கள் செய்யும்போது பல உருவங் களை அடைகிறார் என்பதும் பெறப்படும்.

**18. அருபியாகிய இறைவன் ரூபங்கொண்டது ஏன்?**

ரூபத்தையுடைய நமக்கு ரூபமுடைய ஒரு பொருளை இலகுவில் கண்டுகளிக்க முடியுமே தவிர ரூபமற்றதைக்

காணமுடியாதாகையால் நமக்கிரங்கி அவன் திருவுருவத்தைக் கொண்டான். அருபியாகிய கடவுளை, நாம் ரூபத்தோடு கலந்துறையும் காலம்வரை, ரூபியாகக் கண்டு களிக்க முடியுமே தவிர அருபியாகக் கண்டு அடைய முடியாது. நாம் அருபநிலையையடையும் காலம்வந்தால் இறைவனையும் அருபியாக வணங்கலாம். அதுவரை நமக்கு அவரை ரூபியாகவே வணங்கமுடியும்; அருபியாக வணங்கமுடியாது.

பனிக்கட்டியையும் தண்ணீரையும் ஒன்றுசேர்க்க வேண்டுமானால் பனிக்கட்டி தண்ணீராகவேண்டும்; அல்லது தண்ணீர் பனிக்கட்டியாகவேண்டும். அது போல அருபியாகிய தெய்வத்தை நாம் அடையவேண்டு மானால் அது ரூபியாகவேண்டும். அல்லது நாம் அருபியாகவேண்டும். நாம் அருபியாவது எளிதன்று; ஆகையால் இறைவன் நமக்கிரங்கி ரூபியாகி அருள்கின்றான்

இதனை,

> "அருவனாய் நின்றானை ஆரறிவார் தானே
> உருவனாய்த் தோன்றிலனேல் உற்று"
>
> —சிவஞானபோதம்.

என்னும் சாத்திரப் பகுதியால் உணரலாம்.

**19. இம்மூவகை உருவங்களையும் இந்துக்கள் வழிபடுவது எங்ஙனம் ?**

உருவத் திருமேனியை அவ்வவுருவங்களாகவும், அருவுருவச் சதாசிவத்தைச் சிவலிங்கமாகவும், அருவத்

திருமேனியாய் சிதம்பரரகசியம், சித்சபை, வெளி முதலியனவாகவும் வைத்து வழிபடுகின்றனர். இதனால் இந்துமதம் மனிதர்களைக் கட்டுப்படுத்தாது என்பதும் அவரவர் கருத்துக்கேற்பச் சுதந்திரத்துடன் வழிபட்டு உய்யும்வழிகளையுடையது என்பதும் விளங்குகின்றன.

## 4. சக்தி.

**20. இந்துக்கள், கடவுளுக்கு மனைவி உண்டு என வைத்து வழிபடுவதன் நோக்கம் என்ன ?**

கடவுளின் அருளாகிய சக்தியினையே மனைவியென வைத்து வழிபடுகின்றோம். அந்தச் சக்தி இல்லையானால் கடவுளும் இல்லை. சூரியன் தன் ஒளியைக்கொண்டு இருளை ஓட்டி வெளிச்சத்தைக் கொடுப்பதுபோல இறைவனும் உயிர்களின் மயக்கத்தை, சக்தியைக் கொண்டு ஒழித்து உயிர்களுக்கு மெய்யறிவினைத் தருகின்றான்.

விளக்குச்சுடரில் தீயுமிருக்கிறது; சூடுமிருக்கிறது. தீயிலிருந்து சூட்டினையோ சூட்டிலிருந்து தீயினையோ பிரிக்கமுடியாதபடி அவை ஒன்றுசேர்ந்திருக்கின்றன. அதுபோல ஆண்டவனிடமிருந்து சக்தியையோ சக்தியினிடமிருந்து ஆண்டவனையோ பிரிக்கமுடியாது.

> "அருளது சத்தியாகும் அரன் தனக்கு அருளாயின்றித்
> தெருள் சிவமில்லை அந்தச் சிவமின்றிச் சத்தியில்லை"

—சிவஞானசித்தியார்.

**21. அருட்சத்தி பெண் வடிவம் பெறுவானேன்?**

உலகவுயிர்கள் அனைத்தும் ஆண் பெண் தன்மையில் இருந்தே உலகபோகம் நுகர்ந்து உலகவளர்ச்சி செய்கின்றன. செடி, கொடிகளிடத்தும் ஆண் பெண் தன்மை இருப்பதை அறிகிறோம். ஆண்டவனும் தன் அருளையே பெண் வடிவமாய்க்கொண்டு போகியாய்த் தோன்றி உயிர்கள் அனைத்தையும் போகத்தை அனுபவிக்கச்செய்கின்றான். அவன் அம்மை அப்பனாக இருந்து உலக சிருஷ்டி செய்ததனாலேயே உலகவுயிர் அனைத்தும் அம்மை அப்பராயிருந்து மக்கட்பேறு அடைந்து வாழுகின்றன. அவன் அம்மை அப்பனாயிருந்து உலகசிருஷ்டி செய்யாதுபோனால், நாமும் அம்மையப்பராயிருந்து உலகவிருத்தி செய்தலியலாது. ஆனால் ஆண்டவன் போகரூபத்தோடு யோகரூபமும் வேகரூபமும் அல்லது கோரரூபமும் உடையவன்.

மின்சார சக்தியை ஆராய்ந்து பார்த்தால் அதனுள் இரண்டுவகையான சக்திகள் இருப்பதைக் காண்கின்றோம்; ஒன்று "பாஸிட்டிவ்"; மற்றொன்று "நெகட்டிவ்." ஏன் இவை இரண்டுவகையாயிருக்கின்றன என்பதை எந்த விஞ்ஞான சாஸ்திரிக்கும் சொல்லமுடியாது. இவ்விரண்டும் சேர்ந்தாலல்லது மின்சாரமுண்டாகாது. "இருமையினன்றி, இயங்காது உலகம்" என்பது விஞ்ஞானிகளின் அபிப்பிராயமாகும். இங்ஙனம் எல்லாவற்றிலும் இரண்டிரண்டு சக்திகளிருப்பது ஆண் பெண் போன்ற சக்திகளாகும். இங்ஙனம் உலகம் முழுவதும்

ஆண் பெண் வடிவமாக இயங்குவதற்காகவே, இறைவனும் தன்னருட் சக்தியைப் பெண்வடிவோடு கொண்டு விளங்குகின்றான்.

**22. கோயில்களிற் பள்ளியறை வைத்திருப்பதேன்?**

இறைவனும் அவன் சக்தியும் பிரிந்திருப்பது தகாது; ஒன்றுசேர்ந்தே விளங்கவேண்டும் என்பதற்காகவே அம்மை வேறு அப்பன் வேறாக வைத்து வணங்கி இரண்டினையும் பூஜை முடிவில் ஒன்று சேர்த்து வணங்குகின்றார்கள்.

**23. ஆண்டுக்கு ஒருமுறை ஆண்டவனுக்கு நடத்தும் திருக்கல்யாண வைபவம் எதற்கு?**

ஆண்டவன் நித்தியகல்யாண ரூபி. நமக்கு ஒரு ஆண்டு என்பது தேவர்களுக்கு ஒருநாள். ஆதலால் ஆண்டுக்கொரு திருக்கல்யாணம் நடத்துவது தினமும் நடத்துவதாகும். தினமும் நடத்துவது ஏனெனின் சிவத்தினிடமிருந்து சக்தி பிரியாது அம்மை அப்பராம் போகவடிவம் கொண்டு அருள்செய்வதினாலேயே நாம் உய்கின்றோம் என்கின்ற நன்றியறிதலைக் காட்டுவதற்காகவேயாம்.

**24. பெண்தெய்வங்கள் பல இருக்கக் காரணம் என்ன?**

அரூபத்தில் சிவத்துக்குச் சக்தியும் நாதத்துக்கு விந்துவுமாக இருவகையாகவும்; ரூபத்தில் மகேசனுக்கு

மகேசையாகவும், உருத்திரனுக்கு உமையாகவும், மாலுக்குத் திருவாகவும், அயனுக்கு வாணியாகவும், ரூபாரூபமாகிய சதாசிவத்துக்கு மனோன்மணியாகவும் எவ்வாறு ஏகநாயகனாகிய இறைவன் நடிக்கின்றாரோ அவ்வாறே அவனது சக்தியும் நடிக்கின்றாள். ஒன்பதுவிதமாக நடிக்கின்ற இறைவன் எப்படி ஒருவரோ அதுபோல ஏழுவிதமாக நடிக்கின்ற பெண்தெய்வங்களும் ஏகசக்தி தெய்வத்தின் நடனங்களேயாகும்.

சக்தி

| அருபம் | | ரூபாரூபம் | ரூபம் | | | |
|---|---|---|---|---|---|---|
| சிவம் | நாதம் | சதாசிவம் | மகேசன் | ருத்திரன் | மால் | அயன் |
| — | — | — | — | — | — | — |
| சக்தி | விந்து | மனோன்மனி | மகேசை | உமை | திரு | வாணி |

## 5. கடவுளையடையும் வழிகள்

**25. மோட்சம் அடைவதற்குள்ள மார்க்கங்கள் எவை?**

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கும் மோட்சம் அடைவதற்குரிய மார்க்கங்களாம்.

## 26 சரியையாவது யாது?

சரியையாவது புறத்தொழிலில் மாத்திரத்தால் கடவுளின் உருவத் திருமேனியை வழிபடுதலாம். எஜமானனிடம் வேலைக்காரன் வணங்கிநின்று கூலிபெறுவதுபோல, கிராமிய ஈசுவாமியின்னாங்களையறிந்து பயபக்தியோடு இறைவனை வணங்கிக் கோயில் கட்டுதல், விக்ரகம் அமைத்தல், நந்தவனம் வைத்து மலர்கொய்து மாலை கட்டிச் சாத்துதல், விளக்கேற்றல், விளக்கிடல், மெழுகல், விழாக்கொண்டாடல் முதலியன செய்து கடவுள் அருள் பெறுதலாம். இதனையே தாஸமார்க்கம் எனக் கூறுவர்.

## 27. கிரியையாவது யாது?

அகத்தொழிலாலும் புறத்தொழிலாலும் கடவுளுடைய ரூபாரூபத் திருமேனியை வழிபடுவதாம். தந்தையின் மகன் அன்பாகப்பேசி, கிட்டநின்று, தந்தையைத் தொட்டு அவர்மனதை மகிழ்வித்துத் தனக்கு வேண்டியதைப் பெற்றுக்கொள்வதுபோல, கடவுளைக் கும்பங்களிலும் விம்பங்களிலும் லிங்கங்களிலும் மாலை சாத்தி, பதினாறுவகை உபசாரத்துடன் கும்பிட்டு, நித்தியபூஜையாகிய கிரியைகளைச் செய்து, சந்தியாவந்தனம் முதலியவற்றையும் ஒழுங்காய் இயற்றிக் கடவுளைப் பக்கத்தில் கண்டு அன்புருகி எண்டிசையிலும் உடல் நெக்கு நெக்காக உருக மகிழ்ந்துநின்று வேண்டியவற்றைப் பெற்றுக்கொள்வது சத்புத்திரமார்க்கமாகிய கிரியையாகும்.

## 28. யோகமாவது யாது?

அகத்தொழில்மாத்திரத்தால் கடவுளுடைய அருவத் திருமேனியை வழிபடுதலாம். ஒரு நண்பனோடு ஒரு நண்பன் உரிமையுடன் உறவுபாராட்டி, வழக்கிட்டு அவனை வேறொருவனாகக் கருதாது, மிகமிக நெருங்கி வேண்டியவற்றைப் பெற்றுக்கொள்வதுபோல, கடவுளைத் தனதுள்ளேயே பிராணனை இயக்கி, ஸ்தாபித்து,

"காயமே கோயிலாக கடிமனம் அடிமையாக
வாய்மையே தூய்மையாக மனமணி லிங்கமாக
நேயமே நெய்யும் பாலா நிறைய நீர் அமைய ஆட்டி
பூசனை ஈசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே"

என்றவாறு தன்னுள்ளே தலைவனை உணர்ந்து மூலகுண்டலியை எழுப்பி, புருவமத்தியில் சுடராகிய கொழுந்து விட்டெரியும் உருகிய அமிர்தத்தினை உண்டு, மகிழ்ந்து, வேண்டுவன பெறுதலாகிய தோழன் முறையாகிய **சகமார்க்கமே** யோகம் எனப்படும்.

## 29. ஞானமாவது யாது?

அறிவு மாத்திரத்தினால் உருவம் அருவுருவம் அருவம் என்னும் மூவிதத் திருமேனிகளையும் கடந்து நிற்கும் அகண்டாகார சோதிமயமான கடவுளை நோக்கிச் செய்யும் வழிபாடாகும். கணவனும் மனைவியுமாகிய இரண்டுபேரும் உடல் வேறானாலும் உயிர் ஒன்றாக நின்று இரண்டும் ஒன்றும் இல்லாமல், ஒருவரது இன்பம் மற்றவரதாக ஒன்றுசேர்ந்து உரிமை உறவு உயிர்த்துணை

பூண்டுள்ள மைபோல, கடவுளும் தானும் இரண்டற்று ஒன்றேயாகி, தன்னுள்ளே உலகமும் உலகத்துள்ளே தானுமாகி 'அவனே தானேயாகிய அந்நெறி யேகனாகி' தலைவன் தலைவி முறையில் வெளியிற்செல்லமுடியாத பேரின்பத்தை நுகர்ந்துநிற்கும் நிலையில், வேண்டியன பெறுதலாகிய 'நாயகி நாயக' முறையாம் **சன்மார்க்கமே** ஞானமார்க்கம் எனப்படும்.

## 30. ஞானமார்க்கம் ஒன்றே முத்தியடையத் தக்கதாயிருக்க, சரியை முதலியன எதற்கு?

ஒரு மலையின் உச்சிக்குப் போகப் படிவழி ஏறிச் செல்வதுபோலவும், பத்தாம் வகுப்புக்குப் போகவேண்டிய மாணவன் முதல்வகுப்பு முதல் படித்துப்போவது சரியான முறையாவதுபோலவும் சரியை கிரியை யோகங்களிற் பழகி ஞானமார்க்கத்திற் செல்லுதலே நல்லவழியாகும்.

"விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்பு, மலர், காய், கனிபோல் அன்றோ பராபரமே"

—தாயுமானவர்.

என்றபடி அரும்பில்லாது மலரும், மலரில்லாது காயும், காயில்லாது கனியும் உண்டாகாததுபோல சரியையில்லாமல் கிரியையும், கிரியையில்லாமல் யோகமும், யோகமில்லாமல் ஞானமும், ஞானமில்லாமல் மோட்சமும் கைகூடாது. ஆதலால் மனிதர்களாகப் பிறந்த ஒவ்வொருவரும் சரியைமார்க்கத்திலின்று ஆரம்ப அமைப்பு

முறையையும், ஆலய வழிபாட்டு முறையையும், ஆலய பூஜை விளக்கத்தையும், திருவுருவப் பெருமைகளையும் நன்கு அறிந்து வழிபடவேண்டும்.

**31. சரியை முதலியவற்றைக் கைக்கொண்டு நடப்பவர்களுக்குக் கடவுள் அருள்வது எங்ஙனம்?**

கடவுள் சரியையாளர்க்குத் திருவுருவங்களில் மறைந்துநின்றும், கிரியையாளர்க்கும் யோகிகட்கும் பூஜிக்கும்போது மாத்திரம் தோன்றியும், ஞானிகட்கு அன்பே தாமாய் எப்போதும் விளங்கித் தோன்றியும் அருள்புரிகின்றார்.

---

## 6. ஆலயம்

**32. ஆலயம் என்பதன் பொருள் யாது?**

'ஆலயம்' என்பதை ஆ + லயம் எனப் பிரிக்கலாம். 'ஆ' என்பதற்கு ஆன்மா என்று பொருள். 'லயம்' என்பதற்கு லயிப்பதற்கு அல்லது சேருவதற்கு உரியது என்பது பொருள். ஆகவே, ஆலயம் என்பதற்கு 'கடவுளது திருவடியில் ஆன்மா லயிப்பதற்கு உரிய இடம்' என்பது பொருள். ஆ என்பது ஆணவமலத்தையும், லயம் என்பது அடங்கியிருத்தலையும் குறிக்கின்றமையான், ஆலயம் என்பதற்கு ஆணவமலம் அடங்குவதற்குரிய இடம் என்றும் பொருள்கூறலாம். இதற்குக்

கோயில் என்றும் ஒரு பெயர் உண்டு. அதனைக் கோ + இல் எனப் பிரித்து கோ—கடவுள், இல்—தங்குமிடம், கடவுள் தங்குமிடம் எனப் பொருள் கூறுவர்.

**33. எங்கும் நிறைந்து விளங்கும் கடவுளுக்குக் கோயில் எதற்கு?**

பூமியினடியில் எங்கும் வியாபித்திருக்கும் தண்ணீரை நமக்கு உபயோகமாக்க வேண்டுமானால் ஒரு கிணறுவெட்டிக் கொள்ள வேண்டியிருக்கிறது. தண்ணீர் பூமியின் அடியில் எங்கும் நிறைந்திருந்தாலும் கிணற்றிலேயே நமக்குத் தாகவிடாய் இருக்கிறது. 'எலெக்ட்ரான்' (மின்சாரம்) ஆகாயமெங்கும் வியாபித்திருந்தாலும், 'எலக்ட்ரிஸிட்டி பவர் ஹவுஸ்' (மின்சார நிலையம்) மூலமாகவே நமக்கு அதனை அனுபவிக்கமுடிகின்றது. இவற்றைப்போல, கடவுள் எங்கும் நிறைந்திருந்தாலும் ஆலயங்களில் விசேஷமாக நின்று அருள்செய்கின்றார். ஆகையால் அவர் அருள்பெற ஆலயம் இன்றியமையாததாகின்றது.

**34. இந்நாட்டுக் கோயில்களின் சிறப்புக்கள் எவை?**

இந்நாட்டு ஆலயங்கள் ஒவ்வொன்றும் முதனூல்களின்படியே இயற்பாட்டுத் தத்துவ ஞானத்தை உண்டாக்குவதற்கு இன்றியமையாக் கருவிகளாய் விளங்குகின்றது.

கோபுரம், கொடிமரம், பிராகாரங்கள், மண்டபங்கள் முதலியன சிறந்த தத்துவங்களை விளக்கும்படி அமைக்கப்பட்டுள்ளன.

ஆலயங்களில் நடைபெறும் பஞ்சசுத்தி, பூஜை, நைவேத்தியம், தீபாராதனை, உற்சவம் முதலியனவும் சிறந்தகருத்துக்களை வெளிக்காட்டுவனவாய் இருக்கிறது.

### 35. கோபுரத்தின் தத்துவம் யாது?

கோபுரம் ஸ்தூலலிங்கத்தை உணர்த்துகின்றது. ஆலயங்கள் ஓர் யோகியின் சரீரத்தின்கண் அமைந்துள்ள தத்துவங்களை விளக்குகின்றன. யோகியின் பாதம்முதல் சிரம்வரையுள்ள பாகங்களையும், அவனது இதயத்தில் இறைவன் விளங்கும் தன்மையையும் கோயில்கள் நன்ருகக் காட்டுகின்றன. ஆகவே, சரியை கிரியை உடையவர்களை யோகிகளாக்க ஆலயங்கள் பயன்படுகின்றன என்னலாம். கோபுர தரிசனம் கடவுளது பாத தரிசனம் ஆகும். இதனைப் பிரம்மரந்திரமத்யகபால த்வாரம் என்று யோகிகள் கூறுகின்றனர்.

### 36. கொடிமரத்தின் தத்துவம் யாது?

கொடிமரம், யோகியானவன் பிராணவாயுவை நடுநாடியாகிய சுழுமுனையில் அசைவற்று நிறுத்திக் கொண்டு தியானிக்கில் மனம் முதலிய கரணங்கள்யாவும் நின்று பிரபஞ்சமே தோன்ருது சிவதரிசனம் உண்டாகும் என்னும் உண்மையை அறிவிக்கின்றது.

**37. பிராகாரங்களின் தத்துவம் என்ன?**

கோயிலினுள்ளிருக்கும் ஐந்துபிராகாரங்கள் அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் என்னும் ஐந்துவித கோசங்களையும் குறிக்கின்றன. மூன்றுபிராகாரங்கள் ஐந்துகோசங்களினுலான ஸ்தூலசூட்சுமகாரணம் என்னும் மூவகைச் சரீரங்களை விளக்குகின்றன. வழிபடுவோர் மூன்றுமுறை ஐந்து முறை பிராகாரங்களைச் சுற்றவேண்டும் என்பது, பஞ்ச கோசங்களையும் மூவகைச் சரீரங்களையும் கடந்து இறைவன் விளங்குகின்றான் என்பதை நினைப்பதற்காகும்.

**38. கர்ப்பக்கிருகமாவது யாது?**

கர்ப்பக்கிருகம் என்பது பிரதானமூர்த்தியை வைத்து வணங்கும் இடமாம். இதற்கு மூலஸ்தானம் என்றும் பெயர் உண்டு. இதுவே உண்மை எல்லா உலகங்களையும் படைக்கும் காரணமான மூலப்பிரகிருதியின் இடம் என்பதாம். கடவுள் உலகைப் படைக்க நினைத்த காலத்து அவ்வாறு அருட்சக்தியை மாயையிடத்தே அதிட்டித்து நிற்கின்றார் என்பது கருத்து. அருபியாகிய கடவுள் ரூபாரூபியாகிறார்.

**39. மண்டபங்கள் எவை? அவை எவற்றை உணர்த்துகின்றன?**

அர்த்தமண்டபம், மகாமண்டபம், ஸ்நபனமண்டபம், அலங்காரமண்டபம், சபாமண்டபம் என்னும் மண்டபங்கள், நிவிர்த்தி, பிரதிஷ்டை, வித்தியா, சாந்தி, சாந்தியாதீதை என்னும் கலைகளை உணர்த்துகின்றன.

மேற்கூறியவாற்ருல் ஆலயங்கள் மிகவும் அவசிய மானவை என்பதும், ஆலயபாகங்கள் பெரும் தத்துவங் களைக் கொண்டுள்ளன என்பதும் விளங்குகின்றன.

---

## 7. திருவுருவம்

**40. இந்துக்கள், கடவுள் வழிபாட்டுக்குத் திருவுருவங்களை வழிபடுவது என் ?**

அரசர்பிறந்தநாள் கொண்டாட்டத்தில் அரசரையே வைத்துக் கொண்டாடமுடியாத குடிகள் அவரது படத்தைவைத்துக் கொண்டாடுவதேன் ? அரசரிடத்துத் தமக்குள்ள பக்தியைக் காட்டுதற்கன்ருே ? இவ்வாறே தந்தையின் படத்தைவைத்து மகன் கொண்டாடுவதும், ஜனத்தலைவரின் படத்தைவைத்து ஜனங்கள் கொண் டாடுவதும் அவர்கள்மீது இவர்கட்குள்ள பக்தியைக் குறிக்கிறதல்லவா ?

ஒரு கணவன் தன் காதலியைப் பிரிந்து அயல்நாடு செல்லும்போது தன் காதலியின் படத்தையும் கொண்டு சென்று மகிழ்கின்ருன் அல்லவா ? அவனது காதலியும் அயல்நாடுசென்ற கணவனை எண்ணி எண்ணி அவனைக் காணமுடியாது வருந்தி, அவன்படத்தை வைத்து அதனிடம் சில பேசி, அதைப்பார்த்துக் கணவனைப் புகழ்ந்துரைத்து, அதற்கு மாலைசாத்தி, தான் உண்ணப் போகும் பொருள்களை அப்படத்தின்முன் வைத்துக்

கணவனை உண்பித்ததாக எண்ணி, ஆடியும் பாடியும் மகிழ்கிருள். அயல்நாடுசென்ற கணவன் அவ்வேளையில் அங்குவந்து மறைவாய் நின்று அவள்செய்யும் செயல் களைக்கண்டு தான் இல்லாத வேளையிலும், தனது படத்தைவைத்து வணங்கும் அவளது பதிபக்தியைக் கண்டு மகிழ்வானு? அவள்செயலுக்காக அவளை வருத் தப்படுத்துவானு? நாகரிகமக்களும், உருவவழிபாட்டை ஒத்துக்கொள்ளாதவர்களும் சில மனிதர்களுக்காகப் படத்திறப்புவிழாக் கொண்டாடுவதும், உருவச்சிலைகள் அமைப்பதும் எதைக்காட்டுகின்றன? அவர்கள் குறித்த மனிதரின்மீதுள்ள பக்தியையல்லவோ? அதுபோல, பக்தன் ஒருவன் கடவுளைக்காண விரும்பி அவர்தம் திருவுருவங்களை அமைத்து வழிபடுகின்ருன்.

## 41. கடவுளைத் திருவுருவங்களாக வைத்து வணங்குகிறவர்கள் கடவுள் கோபத்துக்கு ஆளாக மாட்டார்களோ?

அரசன்படத்தை வைத்துக் கொண்டாடும் நம்மை அரசன் கோபிப்பதுண்டா? தன்படத்தை வைத்துக் கொண்டாடும் தலைவியைத் தலைவன் கோபிப்பதுண்டா? தன்னை நேரிற்காணமுடியாமற்போனுலும் தன்படத்தை வைத்துக் கொண்டாடியதற்காக அரசனும் தலைவனும் மகிழ்ந்து, வழிபடுவோர்க்கு வேண்டுவன செய்வது போல, கடவுளும், அவனை நேரிற்காணமுடியாது அவன்திருவுருவத்தை வைத்து வணங்கும் அன்பர்கட்கு அனுக்கிரகம் செய்கின்ருன்.

**42. விக்கிரகங்கள் கடவுளின் உண்மையான திருவுருவங்கள்தாம் என்பதை எப்படி நிச்சயிக்கலாம்?**

கடவுளைத்தேடிக் கண்டுகொண்ட பெரியார் தாம் கண்ட காட்சியைப் பல பாட்டுக்களால் சித்திரித்து வைத்திருக்கின்றார்கள். ஒரு கவி பாடிய பாட்டை வைத்துக்கொண்டு ஒரு சித்திரக்காரன் பாட்டின் பொருள் விளங்கும்படி ஒரு சித்திரம் வரைந்து காட்டுவதுபோல், அவர் பாடிய பாடல்களில் கூறியபடி திருவுருவங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

**43. விக்கிரகங்கள் எவ்வித உணர்ச்சியுமற்ற படங்களைப் போன்றவைதானே?**

விக்கிரகங்களில் சுயம்பாகவே முளைத்தவையும் உண்டு; தேவர்கள் ரிஷிகள் முதலிய பெரியமகான்களால் பிரதிஷ்டிக்கப்பட்டவையும் உண்டு. பூசையின்பொருட்டு எங்கும் நிறைந்து விளங்கும் கடவுளை மூலமந்திரங்கள் சொல்லி ஒரு குறிப்பிட்ட இடத்தில் ஆகமம் உணர்ந்த ஞானிகள் ஆவாகனம் செய்கின்றார்கள். அதன்பின் 'தயாநிதியே! அடியேனை அனுக்கிரகிப்பதற்காக இவ் விக்ரகத்தில் எழுந்தருளவேண்டும் என்று' அன்புடன் யாசித்து ஸ்தாபனஞ்செய்கிறார்கள். இதனை 'அலையாது அழுந்த நிலைபெறல் தாபனம்' என்பதால் அறியலாம். அதன்பின் பலவகைப் பூஜைகளாலும், நைவேத்தியங்களாலும், நித்திய நைமித்திக ஆராதனைகளாலும் கடவுள் சக்தியை அங்கே நிலைநிறுத்தி வழிபடுவோர்

அதிலிருந்து பயன்பெறும்படி செய்துள்ளார்கள். ஆகையால் விக்கிரகங்கள் படங்களைப்போல் உணர்ச்சியற்றவைகளல்ல. படங்களுக்கும் விக்கிரகங்களுக்குமிடையே ஒரு கல்லுருண்டைக்கும் ஒரு பீரங்கிக்கும் இடையிலுள்ள பேதங்கள் உள்ளன.

**44. விக்கிரகத்தைக்கொண்டு உயிர்கள் அனுக்கிரகம் பெறுவது எவ்வாறு?**

சூரியனெதிரே பஞ்சைக் காட்டினால் பஞ்சில் தீப்பிடிப்பதில்லை. சூரியனுக்கும் பஞ்சுக்கும் இடையில் ஒரு சூரியகாந்தக் கண்ணாடியைக் காட்டினால் அது சூரிய கிரணத்தை அதிகமாக இழுத்து வெகுசீக்கிரமாகப் பஞ்சில் தீப்பற்றி எரியும்படிசெய்கிறது; அதுபோல, பஞ்சாகிய நமது உள்ளத்தில் இறைவன் அருளாகிய தீ வெகு துரிதமாகப் பற்றுவதற்குக் கண்ணாடியாகிய விக்கிரகம் மிக உதவுகிறது.

பசுவின் உடலெங்கும் வியாபித்திருக்கும் பால், அதன் மடிவழியாகச் சுரப்பதுபோல், பரந்துகிடக்கும் ஆண்டவனது அருள், விக்ரகவழியாக நமக்குக் கிடைக்கிறது.

**45. எங்கும் நிறைந்து விளங்குகிற கடவுள், விக்கிரகங்களில் எவ்வாறு இருக்கின்றார்?**

கடவுள் பாலில் நெய்போல் எங்கும் வியாபித்திருப்பினும், விக்கிரகங்களில் தயிரில் நெய்போல விளங்கிநிற்கின்றார்.

**46. இந்துமதச் சித்தர்களே விக்கிரக வழிபாட்டை இழிவுபடுத்திக் கூறியது ஏன்?**

"கல்லிலும் செம்பிலுமோ இருப்பான் எங்கள் கண்ணுதலே" எனக் கூறியதன் கருத்து, கல் செம்பு முதலியவற்றினில் மாத்திரமல்ல கடவுள் இருப்பது. எங்கும் நிறைந்து விளங்குகின்றார் என்பதை விளக்குவதற்கேயாம்.

"நட்டகல்லைத் தெய்வமென்று நாலுபுட்பம் சாத்தியே
சுற்றிவந்து முணுமுணென்று சொல்லும் மந்திரம் ஏதடா
நட்டகல்லும் பேசுமோ நாதனுள் ளிருக்கையில்
சுட்டசட்டி சட்டுவம் கறிசுவை யறியுமோ"

"பண்ணேன் உனக்கான பூசை யொருவடிவிலே"

"தீர்த்த லிங்க மூர்த்தியென்று தேடியோடும் தீயரே"

என்றெல்லாம் கூறியவர்கள்,

"பஞ்ச சுத்திசெய்து, நின்னைப் பாவித்துப் பூசைசெய்தால்
விஞ்சியஞானம் விளங்கும் பராபரமே"

எனவும்,

"தீர்த்தலிங்கம் உம்முளே தெளிந்துகாண வல்லிரேல்
தீர்த்தலிங்கம் தானதாய்த் தெளிந்ததே சிவாயமே"

எனவும் ஏன் கூறல்வேண்டும்? அவர்கள் சிவாலய வழிபாட்டை இழித்துக்கூறியது, சிவாலய வழிபாட்டின் தத்துவத்தை உணராது செய்கின்ற கிரியைகள் சீக்கிரம்

பயன்தராவாதலால் அவற்றின் உண்மைகளை மக்கள் அறியவேண்டும் என்பதை வற்புறுத்தவேயாகும்.

**47. ஆலயங்களும், விக்கிரகங்களும் பாமர மக்களுக்காக அமைந்தவைதானே?**

சரியையாளர்கள் முதல் ஞானவான்கள்வரை எல்லா மக்களுக்கும் விக்கிரக வழிபாடு இன்றியமையாததே. ஞானிகளாகிய ஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மணிவாசகர், சங்கராச்சாரியர், நம்மாழ்வார், இராம கிருஷ்ண பரமஹம்சர் முதலியோர் விக்கிரக வழிபாடு செய்யவில்லையா? இவர்களைப் பாமரர்களென்று சொல்ல லாமா? இவர்கள் விக்கிரகங்கள்வாயிலாக அருள்பெற வில்லையா? இவற்றை உற்றுநோக்குமிடத்து விக்கிரக வழிபாடு பாமரஞானிகள்வரை யாவருக்கும் இன்றியமை யாது வேண்டற்பாலதே என்பது விளங்கும்.

ஒவ்வொரு விக்கிரகத்தின் தத்துவங்களையும் அடி யில் ஒவ்வொரு பாடமாக விளக்கியிருப்பதால் இங்கு இத்துடன் இது நிறுத்தப்பட்டிருக்கிறது.

## 8. சிவலிங்கம்

**48. ஆலயங்களில் காணும் விக்கிரகங்களில் முக்கியமானது எது?**

சிவலிங்கமே முக்கியமான விக்கிரகமாம்.

## 49. சிவலிங்கம் என்பதன் பொருள் என்ன?

சிவம் + லிங்கம் = சிவலிங்கம். சிவம் = கடவுள். லிங்கம் = அடையாளம்.

கடவுளைக் காட்டும் குறி அல்லது அடையாளம் என்பது பொருள்.

## 50. லிங்கம் என்பதன் விரிந்தபொருள் யாது?

லி=லயம்; ஒடுங்குதல். கம்=போதல்; தோன்றுதல்.

ஆன்மாக்களும் உலகங்களும் ஒடுங்குவதற்கும் தோன்றுவதற்குமான இடம் என்பது பொருள்.

## 51. சிவலிங்கத்தின் அமைப்பு யாது?

இந்த விக்கிரகத்தின் அடிப்பாகத்தில் உடுக்குப் போன்ற பீடம் ஒன்று காணப்படும். இதற்கு ஆவுடை என்று பெயர். இதன்மேல் உருண்டு நீண்ட, முனையற்ற தண்டொன்று காணப்படும். இதற்குப் பாணம் அல்லது லிங்கம் என்று பெயர். இவற்றுடன் ஆவுடையின் மேற்பாகத்தில் ஒருபக்கமாகக் கோமுகம் ஒன்றும் காணப்படும்.

## 52. சிவலிங்க உருவம் எதை விளக்குகின்றது?

சிவலிங்கம், ஒருருபமாக அமைந்திருந்தாலும், அது மற்ற விக்கிரகங்களைப் போன்று மனிதருபத்தோடு அமைந்திருக்கவில்லை. முன்னர்க் கூறியதுபோல் அருபி யாகிய இறைவன், மற்றைய ருபங்களெல்லாம் தோன்று

வதற்கும் இறுதியில் எல்லாம் தன்னுள் லயமாவதற்கு மாக ஒரு திருவுருவத்தைக் கொள்ளவேண்டியவனு கிறான். அவ்வாறு அவன்கொண்ட ரூபாரூபமாகிய சதாசிவமே சிவலிங்கமாம்.

**53. இறைவன் சிவலிங்க வடிவமாகவே ரூபாரூபத் திருமேனியைக் கொண்டனன் என்பதை எவ்வாறு ஊகித்தறியலாம்?**

பெற்றோர்சாயல் அவரிடம் பிறந்த பிள்ளைகளுக்கும் இருப்பதுபோல் பூமி, சூரியன், சந்திரன்முதலிய அண்டங்களும்; பிண்டங்களும்; முட்டைகளும்; காய்கனிகளும்; பூக்களின் அண்டாசயங்களும்; கார்த்திகைத் தீபமுதல் நம் வீடுகளில் எரியும் விளக்குச்சுவாலைவரை காணும் சோதிவடிவங்களும்; யோகிகளின் யோகத் திருவுருவங்களும் பிறவும் ஏகதேசம் சிவலிங்கவடிவமாகவே காணப் படுகின்றன. ஆகவே, இவைதோன்றுவதற்குக் காரணமாகிய இறைவனும் இத்தகைய ஒரு திருவுருவமாகிய சிவலிங்க உருவத்திலேயே கொண்டுள்ளான் என்பதை நிச்சயிக்கலாம். அணுவுலக ஆராய்ச்சியாளர், அணுவுக்கு அணுவாக எவ்விடத்தும் விளங்கும் எலக்ட்ரானைப் பரிசோதித்துப்பார்த்ததிற் பச்சை நிறமான ஒரு வட்டத்தின் நடுவில் செந்நிறம் பொருந்திய ஒருசோதி துலங்கக் கண்டுளார்கள். இப்பச்சை வடிவம் ஆவுடையினையும், சோதி வடிவம் சிவலிங்கத்தினையும் போன்றுள்ளன. ஆகவே, எலக்ட்ரான்வியாபித்த உலகமெங்கும் சிவலிங்க

வடிவம் தோன்றுவதாலும் இறைவன் கொண்ட அரு வுருவத் தோற்றம் சிவலிங்க வடிவமெனத் தெளியலாம்.

**54. சிவலிங்கம் திரிமூர்த்தி சொரூபம் என்பது ஏன்?**

ரூபாரூபமூர்த்தியாகியபின்னரே இறைவன் அனைத் தையும் படைத்து அளித்து அழிப்ப மும்மூர்த்திகளா யினமையால் சிவலிங்கம் திரிமூர்த்தி சொரூபமாயிருக் கிறது. ஆவுடையில் பிரம்மவிஷ்ணுக்களும், பாணத்தில் சிவனும் அடக்கம் என்பார்கள்.

**55. அரூப இறைவன் முறையே ரூபாரூபியாக வும், ரூபியாகவும் ஆயினன் என்பதை எவ்வாறு ஊகித்தறியலாம்?**

ஒரு மரம் ஒரு வித்திலிருந்து பிறக்கிறதை நாம் பார்க்கிறோம். மரத்தை ஒருரூபமாகக் காண்பதற்குமுன் அது ரூபாரூபமாகிய வித்துவடிவத்தோடு இருக்கிறது. அம்மரமே வித்தாகத் தோன்றுவதற்குமுன் எவ்வித ரூபமும் இல்லாததாயிருக்கிறது. ஒருவிதை இங்ஙனம் அரூபமாயிருந்து ரூபாரூபமாகி ரூபத்தைப்பெறுகிறது. இதுபோலவே ஒரு குட்டியும், ஒரு பிள்ளையும், ஒரு பிண்டத்தில் தோன்றுகின்றன. பிண்டமும் எவ்வித ரூபமுமற்ற ஒன்றிலிருந்து உண்டாகின்றது. இவை அனைத்தையும் உற்றுநோக்குமிடத்துச் சராசரங்கள் எல்லாம் இவ்வகையில் திருவுருவங்கள் பெறுமாறு இயக்கும் இறைவனும் இவ்வகையிலேயே திருவுருவம் கொண்டிருத்தல் வேண்டுமென்று நிச்சயிக்கலாம்.

**56. ஆவுடை எதைக்குறிக்கின்றது?**

'ஆவுடை' என்பது அடியில் பீடமாயிருப்பது. அது சக்தியைக் குறிக்கின்றது.

**57. பாணம் அல்லது லிங்கம் எதைக் குறிக்கின்றது?**

லிங்கம் ஆவுடையின்மீது தோன்றிச் சிவத்தினது உண்மைச் சொரூபமாகிய பரவெளியைக் குறிக்கின்றது.

**58. பரவெளி எதைக் குறிக்கின்றது?**

பரவெளி முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்தது. "ஞானகாசம்" என்று சொல்லப்படும் இப் பரவெளி சிதம்பரம் எனவும், திரு அம்பலம், சிற்றம்பலம் எனவும் கூறப்படும். இந்தப் பரவெளியிலேதான் நடராஜன் ஐந்தொழில் நடனஞ்செய்கின்றான். இந்நடன விசேடங்கள் "நடராஜர்" என்ற பாடத்தில் விளக்கப் பட்டுள்ளன. இந் நடன தரிசனத்தையே சிதம்பரத்தில் "இரகசிய தரிசனம்" என்பர். இப்பரவெளியில் நடராஜர் செய்யும் நடனத்தினலேதான் எல்லாச் சராசரங்களும் இயங்குகின்றன.

**59. லிங்கம் ஆவுடையாளாகிய பீடத்தை ஊடுருவிச்சென்றிருப்பது எதைக் காட்டுகிறது?**

பரவெளியாகிய சிவம் அல்லது நாதம், சக்தி அல்லது விந்துவை ஊடுருவி வியாபித்திருக்கிறது

என்பதையும், ஒன்று மற்றொன்றைப் பிரியாமல் சேர்ந்திருக்கிறது என்பதையும் காட்டுகின்றது.

**60. ஆவுடை லிங்கத்தின்கீழ் அடங்கியிருத்தல் எதனைக் குறிக்கின்றது ?**

சக்தி, சிவத்துக்குள்ளே அடங்கித் தொழில் செய்கின்றது என்பதைக் காட்டுகிறது.

**61. கோமுகி என்பது யாது? அஃது எதைக் குறிக்கின்றது ?**

ஆவுடையாளின் மேற்பாகத்தில் வெளியே நீண்டு இருக்கும் இது சிவசக்தி உயிர்களுக்குச் செய்யும் தண்ணளியைக் குறிக்கின்றது. இதனாலேயே ஆலய வழிபாடு செய்யும் அடியார்கள் கோமுகி வழியாகப் பாயும் அபிஷேக தீர்த்தங்களை இறைவனது திருவருள் சுரப்பதாக மதித்துக் கையால் ஏந்தித் தலையில் தெளித்துச் சிவனருள் பெற்றதாக மகிழ்கிறார்கள்.

**62. சிவலிங்கத்தின் முன்பாகக் காணப்படும் நந்தி அல்லது காளைமாடு எதை உணர்த்துகின்றது ?**

மாடு என்பது சாஸ்திரங்களில் தர்மதேவதை எடுக்கும் ரூபம்; ஆதலால் மாடு தர்மத்தை உணர்த்தும். நந்தி என்பதற்கு ஆனந்திப்பது என்றும் பொருள் உண்டு. வெண்மையான மாடாதலால் ஸாத்வீகத்தையும் பரம்பொருளாகிய லிங்கத்தினிடம் கொண்டு சேர்க்குங் ஸத்குணங்களாகிய சமம், விசாரம், ஸந்தோஷம்,

ஸாது சங்கம் ஆகிய நான்கு ஆத்ம குணங்களையும் உணர்த்தும்,

**63. "நந்தியின் அனுமதியின்றிச் சிவதரிசனம் செய்யமுடியாது" என்பதன் இரகசியம் யாது?**

முற்கூறிய நான்கு ஆத்ம குணங்களும் ஒருவனுக்கு ஏற்பட்டாலல்லது கடவுளை ஸச்சிதானந்த அறிகுறி ரூபமாக உணரமுடியாது என்ற வேதரகசியத்தைப் வெளிப் படுத்தும்.

**64. கோயிலில் பிரதக்ஷணாதிகள் செய்யுங்கால் நந்திக்கும் லிங்கத்திற்கும் குறுக்கே போகலாகாது; நந்தியையும் சுற்றவேண்டும் என்பதன் இரகசியம் என்ன?**

ஸச்சிதானந்த அனுபவத்திலிருந்து வெளிப்பட்டுப் பிரபஞ்ச விகாரத்தில் வரும்போது, மேற்கூறிய ஆத்ம குணங்கள் வழியாக அனுபவம் சேரும் வழிக்கு விரோத மானவற்றைச் செய்யாது ஆத்ம குணங்களிலேயே நிற்க வேண்டும் என்பதாம்.

**65. சக்தி, சிவம் அவற்றின் விளையாட்டுஎன்ற இவற்றை விஞ்ஞானிகள் எவற்றோடு உவமிக் கிறார்கள்?**

சிவம் — மேட்டர் (Matter)
சக்தி — எனர்ஜி (Energy)
விளையாட்டு — ஆக்டிவிட்டி (Activity)

சிவசக்திகளை "கைனிட்டிக் எனர்ஜி"—பொட்டென் ஷியல் எனர்ஜி" என்றும் கூறுகிருர்கள்.

**66. இவற்றை நாம் அறிய வேண்டுவது எதற்கு ?**

சிவலிங்கத்தைப்பற்றி ஆபாசமாக சிலர் கூறும் இழிப்புரைகளை ஒழிப்பதற்கும் சிவலிங்கவழிபாடு செய்கின்றவர்கள் இதன் தத்துவத்தை உணர்ந்து வழிபட்டால் மாத்திரமே நன்மை பெறக்கூடு மாகையினுலும் இத்தத்துவங்கள், அன்பர்கள் அனைவரும் ஐயந்திரிபற அறிதற்குரியனவாம்.

---

## 9. விநாயகர்

**67. 'விநாயகர்" என்ற பதத்தின் பொருள் யாது ?**

நாயகரற்றவர், ஒப்புயர்வற்றவர் என்பது பொருளாம்.

**68. விநாயகர் திருவுருவத்தின் அமைப்பு எப்படி ?**

யானை முகம், ஒடிந்த கொம்பு, பருத்த தொந்தி, இடது கையில் மோதகம், மூஷிக வாகனம் இவற்றுடன் இருந்த கோலத்தோடு விளங்குவதே இத்திருவுருவத்தின் அமைப்பாம்,

**69. இவர் பரமசிவன்றன் மூத்த குமாரர் என்று கூறப்படுவானேன்?**

எல்லாம்வல்ல பரம்பொருளாகிய கடவுளிடமிருந்து முதலாவது உண்டாகிய படைப்பு "ஓம்" எனும் பிரணவநாதமே யாகும். அந்த ஓம் என்னும் ஒலியின் வரிவடிவமே விநாயகரின் திருவுருவமாம். இறைவனிடமிருந்து முதற்கண் தோன்றியது ஓங்காரப் பிரணவமே யாகையால் இவர் "பிரணவகணபதி" யென்றும் "ஓங்கார ரூபன்" என்றும் பரமசிவனது மூத்தபிள்ளை என்றும் அழைக்கப்படுகிறார்.

**70. ஓங்கார ஒலியின் வரிவடிவமே விநாயகர் என்பதை எவ்வாறு விளக்கலாம்?**

ஒடிந்த கொம்பு "ஓ" என்ற எழுத்தின் சுழி இருக்குமிடம். இவ்வெழுத்து இங்கிருந்து தொடங்கி வலக்கை வழியாகக் கிரீடத்தைச்சுற்றி, இடக்கைபாசம் வரையில் வந்து, திருப்பி வளைந்து, நெற்றிப்பொட்டு வரையிற் போய்த் துதிக்கை வழியாகக் கீழிடக்கை வந்து கால்வரை இறங்கும்.

இடக் கையும் மோதகமும் "ம்" என்பதைக்குறிக்கின்றது. ஆகையால் விநாயகர் திருவுருவம் ஓங்கார சொரூபமே யாகும்.

**71. இந்த விக்ரகத்துக்கு யானைமுகம் அமைக்கப்பட்டதேன்?**

யானையின் குரலொலி உலகில் உண்டாகும் மற்ற எல்லா ஒலிகளைக்காட்டிலும் ஓங்காரப் பிரணவ ஒலியை

நன்கு ஒலிப்பதால் யானைமுகம் இவர்க்கு அமைக்கப் பட்டது.

**72. எல்லா வழிபாடுகளிலும் விநாயகர் வழி பாடு முதலாவதாகச் செய்வது எதற்கு?**

*பிரணவ ஒலி எல்லாவற்றிற்கும் முதலாவதாக விளங்குவது; ஆகையால் விநாயகரும் முதலாவதாகப் பூஜிக்கப்படுகிறார்.*

**73. அவர் பெரிய வயிறு உடையவராய் இருப் பது எதைக் குறிக்கின்றது?**

*ஓங்காரத்துள் எல்லா அண்டங்களும் அடங்கிக் கிடக்கின்றன. என்பதைக் காட்டுகிறது.*

**74. மோதகம் அல்லது அமிர்தகலசம் எதைக் குறிக்கிறது?**

*அழிவற்ற தன்மை, நிஜானந்தம் முதலிய கல்யாண குணங்கள் அவரிடம் குடிகொண்டிருக்கின்றன என் பதைக் காட்டுகின்றது.*

**75. இவருக்கு மூஞ்சூறு வாஹனமானது ஏன்?**

*விநாயகர் ஓங்காரப் பிரணவரூபி என்றபோது அது மகாபெரிய அண்டங்களையும் தனதுட்கொண்ட பிரம் மாண்ட வடிவமென் நமக்குப் படுகிறது. அவருக்கு வாஹனம் மூஞ்சூறு என்றபோது, மூஞ்சூறு தாங்கத் தக்க சிற்றுருவினர் என்பதும் தெரிகிறது. ஆதலால்*

கடவுள் அணுவுக்கணுவாயும், மகத்துக்கு மகத்தாயும் இருக்கிறார் என்பதை உணர்த்த மூஞ்சூறு வாகன மாயிற்று.

ஆகவே, கடவுளிடமிருந்து முதலாவது உண்டாகிய ஓங்காரப் பிரணவ சப்தத்தின் ரூபமே விநாயகர் திரு வுருவம் என்பது பெறப்படும்.

## 10. நடராஜர்

**76. நடராஜர் நடனமாடிக்கொண்டு இருப்ப தேன் ?**

அணுக்களைப் பற்றி ஆராய்ச்சி செய்கின்ற விஞ் ஞானிகள், "**அணுக்களெல்லாம் ஏகதாளத்தில் ஆடிக்கொண்டிருக்கின்றன**" என்பதைக்கண்டு அதற் குரிய காரணம் என்ன என்பதை ஆராய்ந்து பார்க்க, காரணம் காணமுடியாது கலங்கினர். அதன்பின் நமது தெய்வம் நடனமாடிக்கொண் டிருக்கிறது என்பதைக் கேட்டு வியந்த அந்த விஞ்ஞானிகள் இங்கு வந்து இதனைக்கண்டு சென்றுள்ளார்கள். அணுக்கள் இயங்க அண்டங்கள் இயங்குகின்றன, அண்டங்கள் இயங்க ஆண்டவனும் நடனமூர்த்தியா யிருக்கவேண்டும். ஆதலி னாலேயே நடராஜர் விக்ரகம் நடனமாடும் ரூபமாக விளங்குகிறது. மனிதர்களுடைய நோக்கம் துக்கம்

நீங்கிச் சுகம் அடையவேண்டும் என்பதேயாகும். நாம் ஆனந்தமடைய ஆனந்தமூர்த்தியை வணங்குதல் வேண்டும். அவர் ஆனந்த நடனம் புரிவதால் எப்பொழுதும் ஆனந்தத்தோடு விளங்குகிறார் என்பது தெரிகிறது.

**77. நடராஜர் திருவுருவத்தின் அமைப்புகள் யாவை ?**

இவ்விக்ரகம் ஒரு மனிதன் நடனமாடும் ரூபமாக அமைந்திருக்கிறது. வலக்காலைக் கீழே ஒரு அரக்கன் மேல் மிதித்து இடக்காலை மேலே உயர்த்தி, ஓர் இடக் கையால் தூக்கிய பாதத்தைக் காட்டி மற்றைய இடக் கையில் அக்கினி தாங்கி, ஒரு வலக் கையில் அபயஹஸ்தம் பிடித்து, மற்றொரு வலக் கையில் உடுக்கினைப் பிடித்து நிற்பதாக இத்திருவுருவம் அமைந்துளது,

**78. இவரது ஒரு வலத்திருக்கையில் உடுக்கு இருப்பதேன் ?**

உடுக்கிலிருந்து வரும் ஒலியால் அண்ட பிண்ட சராசரங்கள் எல்லாம், பெரிய தீயிலிருந்து பொறிகளும் ஊற்றுநீரிலிருந்து குமிழிகளும் வருவன போன்று, இறைவனிடமிருந்து தோன்றுகின்றன என்பதைக் குறிக்கும். ஆகவே, இது சிருஷ்டி அல்லது ஆக்கத்தை உணர்த்துகின்றது, " உலகம் சப்தத்தில் பிறந்து அதிலேயே நிலைபெற்றிருப்பது " என வேதம் கூறுகின்றது.

**79. அபய ஹஸ்தத்தின் கருத்து என்ன?**

இது அமைதிக்குறியைக் காட்டுகிறது. "அங்ஙனமே ஆகுக" என்பதைக்காட்டி உலகமுழுவதும், மாறாமலும் தவறாமலும் ஒழுங்காய்ப் பரிபாலனம் செய்யப் படுவதை இது குறிக்கிறது. "இறைவன் திருவடியே தஞ்சமென வந்தடைந்தார்களைக் காப்பாற்றுவேன்" எனக்கூறுவது போல் அமைந்திருக்கிறது ஆகவே, இது ஸ்திதி அல்லது காத்தலைக் குறிக்கின்றது.

**80. இடத்திருக்கையில் தாங்கியிருக்கும் தீ எதை உணர்த்துகின்றது?**

எல்லா உலகங்களையும் இறுதியில் அநித்திய மாக்கும் சம்ஹார சக்தியை அல்லது அழித்தலை உணர்த்துகின்றது.

**81. ஊன்றிய வலக்கால் எதை உணர்த்துகின்றது?**

படைத்தல் முதலியவிஷயங்களை எவர்க்கும் விளங்க வொட்டாமல் மறைக்கும் மாயாசக்தியை உணர்த்துகின்றது. உயிர்கள் செய்த பாவ புண்ணியங்களுக்குத் தக்கவாறு அவை இன்பதுன்பங்களை நுகரும்படி செய்தலாகிய "திரோபவம்" அல்லது "மறைத்தலை" இது உணர்த்துகின்றது.

**82. தூக்கியபாதம் எதை உணர்த்துகின்றது?**

குஞ்சிதபாதமாகிய தூக்கியிருக்கும் இடக்கால் எல்லோரையும் மயக்கும்படியானதும், அநாதியும்,

அநந்தமுமாயுமுள்ள சிருஷ்டியாதி நாடகத்திலிருந்து உயிர் விடுபட்டு ஓய்வடையும்படி செய்யும் நிழல்போன்ற கடவுளின் கருணையைக் குறிக்கின்றது. இப்பாதத்தை ஓர் இடக்கை சுட்டிக்காட்டி, நமக்குபதேசிக்கும் குருவே போல் "ஆண்டவன் திருவடியன்றி உயிர்களுக்குக் கதியில்லை. ஆதலால் அதனை அடைய முயலுங்கள்" என உபதேசிப்பது போல் இருக்கின்றது. ஆகவே, தூக்கியபாதம் அனுக்ரகம் அல்லது அருளலைக்குறிக்கின்றது.

ஆகவே, நடராஜரது ஆனந்தத்தாண்டவம் பஞ்ச கிருத்தியத்தாண்டவம் என மதிக்கப்படும். இது கடவுளது சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், திரோபவம், அனுக்ரகம் ஆகிய ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழிலை நன்கு விளக்குகின்றது.

"தோற்றம் துடியதனில் தோயும் திதி அமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தே உற்றதிரோதம் முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு"

என்னும் பாட்டும் இதனை விளக்கும். மேலும் இப் பெருமானது திருநடனம்,

"மாயை தனையுதறி வல்வினையைச் சுட்டுமலம்
சாய அமுக்கிஅருள் தானெடுத்து—நேயமுடன்
ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல்
தானெந்தை யார்பாதம் தான்"

—உண்மைவிளக்கம்.

என்றபடி மாயையை அகற்றி, வினைகளைத் தொலைத்து, மலங்களை நீக்கி, மோட்சத்தைத் தருகின்றது என்பதைக் காட்டுகிறது. ஆதலால் நாம் நடராஜப்பெருமானின் திருவுருவச் சிறப்பினை நினைந்து வழிபட்டுய்வோமாக.

## 11. மகேசன்

### 83. மகேசன் யார்?

ஆண்டவனொரு உருவத்திருமேனிகளான மகேசன், ருத்திரன், மால், அயன் என்ற நான்கினுள்ளும் முதலாவதும், தலைசிறந்ததுமான உருவத்தினைக்கொண்டவரே இவர். இவர் பரமேசுவரன் என்றும் அழைக்கப்படுவார்.

### 84. இந்தத் திருவுருவத்தின் அமைப்பு யாது?

பிறையினையும் கங்கையையும் சடாமுடியினிடத்தே தரித்து, பாம்பினை மாலையாகவுடையவராய்த் திருநீறு அணிந்து, சக்தியை ஒருபாகத்தில் அமர்த்தி, ரிஷபவாகனாரூடராயிருப்பதாம்.

### 85. இவரது வாகனம் நந்தி என்ற வெள்ளை மாடு என்பது ஏன்?

நந்தி தர்மசொரூபம். இது சமம், விசாரம், சந்தோஷம், சாதுசங்கமாகிய நான்கு குணங்களையும் நான்கு

கால்களாகக் கொண்டிருக்கிறது. நந்தியின்மீது பரமே சுவரன் ஆரோகணிப்பது, இந்நான்குவகை ஆத்மகுணங் களையுங்கொண்ட உயிர்களிடத்துமாத்திரமே இறைவன் எழுந்தருளி வீற்றிருந்து அருள்செய்வன் என்னும் தத்து வத்தை விளக்குவதாகும்.

**86. இவர் வெண்ணீறு அணிந்திருப்பது ஏன்?**

நிலையாமையை உணர்த்தி அருளொளி நல்கி எல்லா உயிர்கட்கும் நற்பயனளிக்க இவர் வெண்ணீறு அணிந் திருக்கின்றார். நாமும் இவரைப்போல் வெண்ணீறு அணியவேண்டும் என்பதையும் இது காட்டும்.

**87. இவர் அரவம் அணிந்திருப்பது எதை உணர்த்துகிறது?**

அரவம் அணிவதால் உலகத்தினை இயக்கும் தனது சக்தியை உணர்த்துகிறார்.

**88. இவர் மறை ஓதுவது எதற்கு?**

நமக்கு அறிவினைத் தருதற்பொருட்டும், நாமும் அதுபோல் ஓதுதற்பொருட்டும் இவர் இங்ஙனம் செய் கின்றார்.

**89. சடையில் கங்கை தரித்திருப்பது ஏன்?**

பகீரதன் தன் மூதாதையரையெழுப்ப தேவகங்கா நதியைத் தவவலிமையால் பூவுலகுக்குக்கொணர்ந்தான். அது உலகத்தை அழித்துவிடக்கூடுமாதலால் அதனை

இறைவன் தன் சடையில்வாங்கிச் சிறிது உலகத்திற்குத் தந்தனன் என்பது வரலாறு. இதனை உற்றுநோக்குவார் இறைவன் இரண்டாவது மனைவியாகக் கங்கையை வைத்துள்ளார் என்று கூறுவர். இறைவனைத் தரிசிக்காத விடத்து உயிர் பரிசுத்தம்பெறாது என்பது இதன் தத்துவார்த்தம்.

**90. இவர் மூன்றாம்பிறைச் சந்திரன் அணிந் திருப்பது எதைக் குறிக்கும்?**

தக்கனால் அடைந்த பெருஞ்சாபத்தினை நீக்கச் சந்திரன் இறைவனை அடைக்கலம்புக, அவன் அதைநீக்கி இரட்சித்துச் சடாமுடியில் தரித்துக்கொண்டான் என்பது வரலாறு. இது இறைவன் தன்னை அன்புடன் அடைந்தவரைக் காத்து இரட்சிப்பான் என்பதை உணர்த்துகின்றது.

**91. இவர்தம் சக்தி யார்?**

மகேசை அல்லது பார்வதி.

**92. பார்வதிக்குப் பாதி உடல் கொடுத்தார் என்பதன் கருத்து என்ன?**

இவர் வேறு இவரது சக்திவேறு அல்ல என்பதை இது குறிக்கின்றது.

## 12. திருமால்

**93. திருமால் அல்லது மஹாவிஷ்ணு யார்?**

ஏகநாயகன் உலகத்தைப் படைத்து, அளித்து அழிக்கக்கொண்ட மும்மூர்த்தங்களில் காத்தல் தொழிலைக்கொண்ட கடவுள் இவர்.

**94. ஆலயங்களில் இவரது திருவுருவம் எவ்வாறெல்லாம் வைத்து வணங்கப்படுகிறது?**

நின்ற திருக்கோலமாகவும், இருந்த திருக்கோலமாகவும், ஆதிசேஷ சயனத்திருக்கோலமாகவும் வைத்து வணங்கப்படுகிறது.

**95. இவரது திருவுருவத்தின் அமைப்புயாது?**

ஒருகையில் பாஞ்சசன்யம் என்ற சங்கினையும் மற்றொரு கையில் ஸுதர்சனம் என்ற சக்கரத்தினையும், ஒருகையில் கௌமோதகி என்ற கதையினையும் இவர் கொண்டிருக்கிறார். ஒருகை அபயகஸ்தமாக அமைந்திருக்கிறது. மார்பில் கௌஸ்துபமணியினையும் நெற்றியில் ஸ்ரீ வத்ஸம் என்ற மறுவினையும் கொண்டிருக்கிறார்.

**96. கையிலிருக்கும் சங்கு எதைக் குறிக்கின்றது ?**

சங்கிலிருந்து உண்டாகும் ஓங்காரப் பிரணவ ஒலியால் இறைவன் எல்லாவற்றையும் படைக்கின்றான் என்பதை உணர்த்துகின்றது.

**97. சக்கரம் எதை உணர்த்துகின்றது?**

*உலகத்தையெல்லாம் இறைவன் இறுதியில் அழிக்கின்ற செயலை உணர்த்துகின்றது.*

**98. கதாயுதம் எதை உணர்த்துகின்றது?**

*ஓயாத சஞ்சலம் நிறைந்த உலகவாழ்வாகிய பெரும் போரில் நம்மைத்தாக்கும் சுகதுக்க ரூபமான அம்புகளைத் தடுக்கும் புத்தியைக் குறிக்கின்றது.*

**99. அபயஹஸ்தம் எதை உணர்த்துகின்றது?**

*எல்லாவுலகங்களையும் எவ்வுயிர்களையும் இறைவன் காத்து இரட்சிக்கின்றான் என்பதை உணர்த்துகின்றது.*

**100. கௌஸ்துபமணி எதை உணர்த்துகின்றது?**

*பிரபஞ்சத்துள் ஆடுகின்ற பரஞ்சோதியாகிய அந்தராத்மாவை உணர்த்துகின்றது.*

**101. நெற்றியிலுள்ள ஸ்ரீவத்ஸம் எதை உணர்த்துகின்றது?**

*சகலத்திற்கும் ஆதாரமாகிய ப்ரதானம் என்ற தத்துவத்தை உணர்த்துகின்றது.*

**102. சேஷசயனத் திருவுருவம் எவ்வாறு அமைந்திருக்கிறது?**

இத்திருவுருவம் சங்கு, சக்கரம், கதை, பதுமம் முதலியவற்றை அணிந்து ஐந்து தலையுள்ள பாம்பின் மீது படுத்துக்கொண்டு ஒருவித உறக்கத்தில் இருப்பதாகவும், பாம்பு படமெடுத்துக் குடைபிடிப்பதாகவும், திருவடியின் பக்கத்தே மஹாலக்ஷ்மி என்ற அம்பிகை உட்கார்ந்திருப்பதாகவும் அமைந்திருக்கிறது.

**103 இவர் எப்போதும் தூங்கிக் கொண்டு கிடப்பதன் கருத்து என்ன ?**

இவர் தூங்கும் தூக்கம் நாம் தூங்கும் தூக்கம் போன்றது அன்று. இதற்கு யோகநித்திரை அல்லது அறிதுயில் என்று பெயர்; அதாவது எல்லாவற்றையும் தம்முள்ளடக்கி அவற்றை நன்றாய் நடைபெறச்செய்து, தாம் எவ்வித பந்தமும் கவலையுமற்றவராய் ஆனந்தமாகக் கிடப்பதை உணர்த்துகிறது. இவரது சயனக் கோலம் இவர் எங்கும் நிறைந்திருக்கிறார் என்பதையும் உணர்த்துகிறது.

**104. இவரது சயனம் ஆதிசேஷன் என்ற பாம்பின் மீது என்பது எதனை உணர்த்தும் ?**

பாம்பு தாமத குணமாகிய கோபத்தினை யுடையது. சேஷன் என்பதற்கு சேஷித்துநிற்பது என்பது பொருள். அதாவது, பிரளயகாலத்தில் எல்லாம் அழிந்துபோக மீதியாய் நிற்கும் தாமத குணத்தினை இது உணர்த்தும். இந்தத் தாமதகுணமும் இறைவனுக்குக் கீழ்ப்படிந்து அடங்கிக் கிடக்கும். ஆதலால், இஃது இறைவனது படுக்கையாக அமைந்துள்ளது.

## 105. பாற்கடல் எதை உணர்த்துகின்றது?

பால் பரிசுத்தமானது. களங்கமற்ற பளிங்கு போன்ற வெள்ளைநிறம் உடையது. இவ்வாறு பரிசுத்தமான இடங்களே இறைவன் அமர்ந்து அருள் புரிவதற்கு ஏற்ற இடங்கள் என்பதை இது குறிக்கும்.

அன்றியும், மற்றைக் கடல்களெல்லாம் சதா ஆடிக்கொண்டிருக்க, பாற்கடல் மட்டும் சலனமற்றிருக்கிறது. சாந்தத்தைக் குறிக்கும் சலனமற்ற தன்மையையுடைய இப்பாற்கடலில், பரமன் படுத்திருக்கும் தன்மை, சஞ்சலமற்ற சாந்தமுடையவாது உள்ளத்தில்தான் இறைவன் தோன்றுவான் என்பதை உணர்த்துகின்றது.

மேலும், ஆண்டவனது திருவருள் பாலமுத மயமாகப் பொங்கித் ததும்பிப் பூரணமாய் ஏக உருவாய்க் கிடப்பதையும், உயிர்கள் அதனை அடைந்து பரமானந்தத்தை அனுபவிக்க வேண்டியதையும் இது குறிக்கின்றது.

பரவெளியில் பரமன் பரந்து விளங்குகின்றான் என்ற தத்துவத்தை யொட்டிப் பார்க்கும்பொழுது பாற்கடல் பரவெளியாகின்றது எனவுங் கூறுவர்.

விடத்தே ஆரவாரித்து கைவண்மையையுடைய தலைவன் காஞ்சிபுரத்தின்கண்ணே இருக்கின்றான். அவனைக் குறுகி

"புலவர் பூண்கட னாற்றிப் பகைவர்
கடிமதி லெறிந்து குருமி கொள்ளும்
வென்றி யல்லது வினையுடம் படினு
மொன்றல் செல்லா வுரவுவாட் டடக்கைக்
கொண்டி யுண்டித் தொண்டையோர் மருக
மள்ளர் மள்ள மறவர் மறவ
செல்வர் செல்வ செருமேம் படுந
வெண்டிரைப் பரப்பிற் கடுஞ்சூர் கொன்ற
பைம்பூட் சேஎய் பயந்தமா மோட்டுத்
துணங்கையஞ் செல்விக் கணங்குநொடித் தாங்குத்
தண்டா வீகைநின் பெரும்பெய ரேத்தி
வந்தேன் பெரும வாழிய நெடிதென"

கூறிப் பேரியாழை முறையாக வாசித்து, கையாற் றொழுது வாழ்த்தி நிற்க நின்னுடைய கலைகளெல்லாம் தெரிவதற்கு முன்னமே மலைகிழவோன் யாக்கையும் செல்வமும் முதலியன நில்லாத உலகத்திலே நிலைபேறுடைய புகழைப் பெறுதல் நன்றென்று ஆராய்ந்து தன்னை அணுகுதற்குஅழைத்து நுமது சிதரினசிலையைப்போக்கிப் பாலாவி போன்ற பைந்துகிலைச் சுற்றத்தாரோடு உடுக்கப்பண்ணிக் கொழுவிய தசைகளும் இடை முரியாத சோறும் பிறவுமாகிய அடிசிலைக் கலங்களிற் பரப்பித் தான் முன்னின்றூட்டி விறலியர் பொன்மாலையைச் சூடாநிற்க நுமக்குப் பொற்றாமரையை கரியமயிரிடத்தே அழகுபெறச் சூட்டி அரியதேர் நல்கியும் அமையானாய்க் குதிரை முதலான பிற பரிசில்களையும் நீ சென்ற அற்றைநாளே தருவான் என்க.

"ஆதியும் நடுவும் ஈறும் அருவமும் உருவும் ஒப்பும்
ஏதுவும் வரவும் போக்கும் இன்பமும் துன்புமின்றி
வேதமும் கடந்துநின்ற விமல! ஓர் குமரன் தன்னை
நீதரல் வேண்டும் நின்பால் நின்னையே நிகாக்க"

என்றார். இப்பாட்டினை உற்றுநோக்குவோம். முழு முதற்கடவுளின் இலக்கணங்களை யெல்லாம் தேவர்களே எடுத்துக்கூறி, ஆதியற்ற குமரனை நின்பால் நீயே தரல் வேண்டும் என்கின்றனர். ஆகையால் தேவர்களுக்கும் சிவபெருமானே ஒரு குமாரனாய்த் தோன்றவேண்டும் என்ற கருத்து இருந்ததாகத் தெரிகிறது. சிவபெருமானே ஆறுமுகங்களைக் கொண்டு ஆறு நெற்றிக்கண்களி லிருந்தும் ஆறு தீப்பொறிகள் தோற்றுவிக்க, அந்த ஆறும் சரவணம்சேர்ந்து அறுமுகனொருவனாகத் திரு அவதாரமாயின என்றே நாம் அறிகிறோம். இவற்றி லிருந்து ஈசனே அறுமுகனாகத் தோன்றினான் என்பது வெளிப்படும். இக்கருத்தை வலியுறுத்தவே கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள்,

"ஈசனே அவனுடைவால் மகவேயாகினன் காண
பேசில் ஆங்கவன் பரனொடு பேதகன் அல்லன்"

என்று கூறியுள்ளார்.

"செம்மான்மகளைத் திருடும் திருடன்
பெம்மான் முருகன் பிறவான் இறவான்"

—கந்தரனுபூதி.

என்பதிலிருந்தும் முருகன் இடைக்காலத்தில் தோன்றி யவனல்லன் என்பதும் முழுமுதற்கடவுளே முருகனைத் தோன்றினன் என்பதும் விளங்கும்.

**108. முருகனது திருவுருவத்தின் அமைப்பு யாது?**

ஆறுமுகங்கள் பன்னிரண்டு கரங்கள் அழகிய வடிவேல் இவற்றைக்கொண்டு, வள்ளி தெய்வானை என இரு சக்திகள் சமேதராக விளங்குவதே முருகனது உருவத்தோற்ற அமைப்பாம்.

**109. முருகன் ஆறுமுகம் கொண்டதேன்?**

பரமேஸ்வரனுக்குள்ள ஐந்து முகத்தோடு அதோ முகத்தினையுங்கொண்டு முருகன் அறுமுகனாயினன். சிவத்துக்குரிய ஐந்து முகத்தினையும் சக்திக்குரிய ஒரு முகத்தினையும் கொண்டு அறுமுகனாயினன் எனவும், நான்கு திசைகளையும் மேல்கீழிடங்களையும் நோக்கி அனைத்தையும் பரிபாலனஞ் செய்ய இறைவன் அறுமுகனாயினன் எனவும் கூறுப.

**110. இவர்தம் ஆறு முகங்களுள் ஒவ்வொன்றும் செய்யும் தொழில்கள் யாவை?**

"மாயிருள் ஞாலம் மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம்; ஒருமுகம்
ஆர்வலர் ஏத்த அமர்ந்தினிது ஒழுகிக்
காதலினுவந்து வரங்கொடுத்தன்றே; ஒருமுகம்
மந்திரவிதியின் மரபுளி வழாஅது
அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே; ஒருமுகம்
எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித்
திங்கள் போலத் திசைவிளக் கும்மே; ஒருமுகம்
செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக்

கறுவுகொள் நெஞ்சமொடு களம்வேட்டன்றே; ஒருமுகம்
குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகையமர்ந்தன்றே"

—திருமுருகாற்றுப்படை.

(அ) ஒரு முகமானது பெருமையாகிய இருளை யுடைய உலகம் குற்றமில்லாமல் விளங்கும்பொருட்டுப் பல கிரணங்களையும் தோற்றுவித்தது.

(ஆ) ஒரு முகமானது அன்பர்கள் துதித்தால் அவர்கள் குற்றங்களை நீக்குவதற்கு உடன்பட்டு அவர்களுக்கு இனிதாய் நடந்து அவர்கள்மேற் சென்ற விருப்பத்தினாலே மகிழ்ந்து அவர்கள் வேண்டும் வரங்களைக் கொடுத்தது.

(இ) ஒரு முகமானது மந்திரத்தையுடைய வேதத்திற் சொல்லிய முறைமை தவறாத பிராமணர்களுடைய யாகங்களிலே தீங்கு வராதபடி நினையா நிற்கும்.

(ஈ) ஒரு முகமானது வேதாகமங்களிலே மறைந்து கிடக்கும் பொருள்களை இருடிகள் இன்பம் பொருந்தும் படி ஆராய்ந்து போதித்துச் சந்திரனைப்போலத் திசைகளெல்லாவற்றையும் விளக்கும்.

(உ) ஒரு முகமானது திருவுள்ளத்திலே நிகழாநின்ற சமத்துவத்தை ஒழித்துக் கோபங்கொண்ட திருவுள்ளத்துடனே பகைவராகிய அசுரர்களை வதைத்துப் போர்க்கள வேள்வியை வேட்டது.

(ஊ) ஒரு முகமானது வேடருடைய மடப்பத்தை யுடைய மகளும் கொடிபோலும் இடையினையுடைய இளம் பெண்ணுமாகிய வள்ளிநாயகியுடனே மகிழ்ச்சி யைப் பொருந்திற்று.

இவ்வாறு இவ்வாறுமுகங்களும் அவ்வம்முகங்களுக் கேற்ப ஒவ்வோர் தொழிலினைக்கொண்டு விளங்கும்.

**111. பன்னிரு கரங்கள் செய்யும் தொழில்கள் யாவை?**

ஒருகை தேவர்களையும் ரிஷிகளையும் பாதுகாக்க அமைந்தது. அதற்கிணையான ஒருகை மருங்கிலே கிடந்தது. மூன்றாவது கை அங்குசத்தைச் செலுத்து கின்றது. அதற்கிணையான கை ஆடை உடுத்திய தொடையில் கிடக்கின்றது. ஐந்தாவதும் ஆறாவது மாகிய கைகள் அழகிய பெரிய பரிசையொடு வேலா யுதத்தை வலமாகச் சுழற்றுகின்றன. ஏழாவது கை முனிவர்களுக்கு உரையிறந்த பொருளை உணர்த்த மார்போடு சேர்ந்து விளங்க, எட்டாவது திருக்கை மார்பில் தாழ்ந்து தொங்கும் மாலையுடனே சேர்ந்து விளங்குகிறது. ஒன்பதாவது கை வளைகளுடனே மேலே சுழன்று களவேள்வியை வேட்கும் முத்திரை கொடுக் கின்றது. இதற்கிணையான கை மணியை மாறி ஒலிக்கப் பண்ணுகின்றது. பதினொன்றாவது கை மழையைப் பெய்விக்கின்றது. அதற்கு இணையான மற்றொரு கை தெய்வப்பெண்களுக்கு மணமாலை சூட்டுகின்றது.

**112. வள்ளி, தெய்வயானை, வடிவேல் இவை எவற்றை உணர்த்துகின்றன?**

*இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி என்பவற்றை உணர்த்துகின்றன.*

**113. இவர் சூரசங்காரம் செய்தது என்?**

*இறைவனது கருணை, அறக்கருணை மறக்கருணை என இரு வகைப்படும். நல்லவர்களை அறக்கருணையாலும் பொல்லாதவர்களை மறக்கருணையாலும் இறைவன் ஆட்கொள்ளுகின்றான். சூரன் தான்பெற்ற வரத்தால் நன்மக்களுக்கும் தேவர்களுக்கும் துன்பம் பல செய்தான். அவன் மேலும் இவ்வுடலோடு நீண்ட காலம் இவ்வுலகில் தங்கினால் பலப்பல பாவச்செயல்களைச் செய்து மீளா நரகத்திற்கு ஆளாவான் என்பதனையும், தவத்தால் வரம் பல பெற்ற இவன் பெரும் பாவியாகி விடக்கூடாது என்பதனையும் கருணையால் நினைந்து, இறைவன் குமரநாயகனாகத் தோன்றி வேலாயுதத்தால் அவனது உடலினை இருகூறாக்கி, அவற்றுள் ஒன்றினை மயில்வாகனமாகவும் மற்றொன்றினைச் சேவற்கொடியாகவும் தன்னோடு சேர்த்துக்கொண்டான். இதனை விளக்கவே, திருவிழாக்களில் சூரசங்காரம் முடிந்தவுடன் முருகனை மயில்வாகனத்தில் ஏற்றுகின்றார்கள். அப்பொழுது அவனுக்குச் சேவல் கொடியாகின்றது. இதிலிருந்து முருகன் சூரனைக் கொல்லவில்லையென்பதும் மறக்கருணையால் ஆட்கொண்டான் என்பதும் நன்கு விளங்குகின்றன.*

**114. கடவுள் உயிர்களிடத்து அன்பின்றி உயிர்க்கொலை செய்வது என் ?**

பெற்ரோர் தம் பிள்ளைகளிடம் நோய் ஒன்று கண்டால் தாமே அந்நோயினை மாற்ற வேண்டியதைச் செய்கின்ருர்கள். கத்தியால் அறுத்தும் சுட்டும் கடுந் துன்பம் செய்வித்தும் அதனைப் போக்குகின்ருர்கள். இச்செயல் அவர்களுக்குப் பிள்ளைகளிடமிருக்கும் அன்பினைக் காட்டுகிறதா? பகைமையைக் காட்டு கிறதா? அன்பினையல்லவோ காட்டுகின்றது; அதுபோல நம்மிடம் பற்றிய பாவங்களைத் தீர்ப்பதற்குப் பரமன், கருணையாலேயே இவை போல்வனவற்றைச் செய்கிருன். இதனை,

> " தந்தைதாய் பெற்றதத்தம் புதல்வர்கள் தஞ்சொலாற்றின்
> வந்திடாவிடில் உறுக்கி வளாரினல் அடித்துந் தீய
> பந்தமும் இடுவர் எல்லாம் பார்த்திடிற் பரிவேயாகும்
> இந்தநீர் முறைமையன்ரே ஈசனர் முனிவுமென்றும் "

எனவரும் **சிவஞானசித்தித்** திருவிருத்தத்தினுலும் அறிக.

**115. சூரசம்ஹாரத்தின் தத்துவம் யாது ?**

சூரன் ஆணவமலம் நிறைந்த ஓர் உயிர். ஆணவ மலம் முதிர்ந்த உயிர் ஒருபோதும் இறைவனைக்காணுது. அம் முனைப்பு ஒடுங்கியபோது அஃது இறைவனைக் காணும். ஆணவமலம் நிலை நிற்கும் காலம்வரையில் அது பிறந்து இறந்து பேதமையுற்றுத் தவிக்கும்.

ஆதலால் அம்முனைப்பாம் அரக்கனைக் கொன்றாலல்லது உயிருக்குப் பிறவிமூப்புச் சாக்காடொழித்து இறைவனோடு ஒன்றி வாழ இயலாது. அவ்வாறு ஆணவ மலத்தைப் போக்கும் ஆற்றலுடையவன் இறைவனே. அவன் உயிர்களிடத்துக் கொண்ட கருணையால், ஆணவ மலமாகிய சூரனது ஸ்தூல உடம்பைக்கொன்று ஆணவ மலம் நீங்கின அநாதித் தன்மையுள்ள ஆத்மாவாகிய அவனது உயிரினைத் தன்னோடு சேர்த்துக்கொள்ளுகின்றான் என்பது தத்துவம்.

### 116. வள்ளி திருமணத்தின் தத்துவம் யாது?

**சிவஞானபோதம்** எட்டாம் சூத்திரத்திற் கூறியவாறு உயிர் தன்னியல்பறியாது கருவிகளின் இயல்பே தன்னியல்பு என மயங்கி உணர்வற்றுக் கிடக்கும் பொழுது, இறைவன் தோன்றி உணர்வினை நல்கி, உபதேசித்துத் தன்னோடு இரண்டறச் சேர்த்துக் கொள்ளுவன் என்பதே இதன் தத்துவமாம்.

"ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அன்னிய மின்மையின் அரன்கழல் செலுமே."

—சிவஞானபோதம்

### 117. பராசக்தியாகிய வள்ளிநாயகியினைப் புனங்காப்பது எதனைக் குறிக்கின்றது?

உயிர் தன்னியல்பறியாது, வேடர் சேரியில் வளரும் அரசகுமாரனைப் போலக் கருவிகளால் மயங்கி நிற்கும் என்பதைக் குறிக்கின்றது.

**118. இறைவன் வேடனாய்வந்ததும்; வேங்கை மரமானதும் எவற்றை உணர்த்துகிறது?**

*இவ்வாறு மயங்கிக் கிடக்கும் உயிரினது இயல்பை இறைவனே எழுந்தருளி உணர்த்துகின்றான் என்பதை இவை விளக்குகின்றது. வேடனாய்வந்தது அஞ்ஞானத்தினைப் போக்கியும், ஞான உணர்ச்சிக்குரிய அவாவினை எழுப்பியும், அடிமுதல் மறைகளாகவும், நடுப்பாகம் சிவநூல்களாகவும், கிளைகளைத்தும் கலைகளாகவும் உடைய வேங்கைமரத் தோற்றத்தால் ஞானத்தினை நல்கியும் அருள் செய்கின்றான் என்க.*

**119. முருகன் கிழவனாய்த் தோன்றியதேன்?**

*இறைவன் உயிர்களுக்குக் குருவாகவும் எழுந்தருளித் தீக்ஷை கொடுத்து மலத்தினை அகற்றுவான் என்பதை இது உணர்த்துகின்றது.*

**120. முருகன் யானையை வரவழைத்ததேன்?**

*இறைவனே குருவாய்த்தோன்றி உபதேசமும் கொடுப்பான் என்பதை இது உணர்த்தும். யானை இறைவனது ஓங்காரப் பிரணவ சொரூபமாகும்.*

**121. யானையைக் கண்ட வள்ளிநாயகி முருகனைப் பற்றிக்கொண்டது எதனை உணர்த்தும்?**

*தன் சிறப்பியல்புணர்ந்து உபதேசம் பெற்ற உயிர், கருவிகளை நீங்கிச் சிவத்தை நாடிச் சென்றடையும் என்பதை உணர்த்துகின்றது.*

**122 வள்ளிநாயகி முருகனது மனைவியானது எதனை உணர்த்தும்?**

*இறைவனை உணர்ந்து அவனது அன்பிற்குப் பாத்திரமான உயிர் அவனோடு இரண்டறக்கலக்கும் என்பதை உணர்த்தும்.*

**123. முருகன் வீற்றிருந்தருளும் விசேடத் திருத்தலங்கள் யாவை?**

*திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருவாவினன்குடி, திருவேரகம் அல்லது குமாரகோவில், குன்றுதோறாடல், பழமுதிர் சோலை என்ற ஆறுபடைவீடுகளுமாம்.*

**124 முருகனுடைய மறுபெயர்கள் எவை?**

*இவருக்குக் 'குகன்' என்ற ஒரு பெயருண்டு. இப்பெயர் மலைக்குகையில் வசிப்பவன் என்று பொருள்படினும் அன்பர்களது உள்ளமாகிய குகைகளில் உறைபவன் எனவும் பொருள்படும். "சுப்பிரமணியன்" என்ற பெயர் சுத்தப் பிரமத்திலின்றும் தோன்றிய மணி போன்றவன் என்று பொருள்படும். "குமாரன்" என்ற பெயர் அழகில் மன்மதனை ஜயித்தவன் எனப்பொருள்படும். "கந்தன்" என்ற பெயர் உமாதேவியாரால் சேர்க்கப்பட்டவன் என்றும், நறுமணத்தினை யுடையவனும் நமக்குத் தருபவனும் இருக்கின்றான் என்றும் பொருள்படும். "சச்சிதானந்தன்" என்ற பெயர் சத்தும் சித்தும் சேர்ந்தவழிப் பிறக்கும் ஆனந்தத்தினை நிகர்த்தவன்*

என்று பொருள்படும். இவருக்கு வேலாயுதன், ஷண்முகன் முதலிய வேறு பல பெயர்களும் உண்டு.

இத்தகைய பெருமை வாய்ந்த கலியுகவரதனும் கந்தக் கடவுளின் கழலிணைபோற்றிக் கடைத்தேறுவோமாக.

---

## 14, ஆன்மாக்கள்

**125. ஆன்மாக்கள் இயல்பு என்ன?**

எல்லாம் வல்ல இறைவனால் படைப்பிக்கப்பட்டு ஓர் உடம்போடுகூடித் தாம்செய்த வினைகளுக்கேற்ப அநுபவம் உடையவராய், சிற்றறிவினற் சிற்றின்பங்களை நுகர்பவராய், தமக்கொரு கடவுளை உடையவராய் இருக்கும் உயிர்களே ஆன்மாக்களாவர்.

**126. ஆன்மாக்கள் எடுக்கும் உடம்பு எத்தனை?**

ஸ்தூல உடம்பு ஸூக்ஷ்ம உடம்பு என இரண்டாகும்.

**127. ஸ்தூல உடம்பாவது யாது?**

பஞ்சபூதங்கள் கூடிப் பரிணமித்த உடம்பாம்.

**128. ஸூக்ஷ்ம உடம்பாவது யாது?**

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஐந்தும் மனம், புத்தி, அகங்காரம் என்ற மூன்றும் சேர்ந்து

ஆன்மாக்கள் உலக போகங்களை அநுபவிப்பதற்குக் கருவியாக நின்று மரணகாலத்தில் ஸ்தூல உடம்பை விட்டுப் பிரியும் அருப உடம்புக்கு ஸூக்ஷ்ம உடம்பு என்று பெயர்.

**129. உயிர்களின் தோற்றவகை யாவை?**

முட்டையிலே பிறக்கும் அண்டஜம்; வியர்வை யிலே பிறக்கும் சுவேதஜம்; வித்து, வேர், தடி, கொடி, கிழங்கு இவற்றில் பிறக்கும் உத்பிஜம்; கருப்பையிலே பிறக்கும் சராயுஜம் என்ற நான்குமாம்.

**130. மரணத்தின் பின்னுள்ள மனிதர் நிலை யாது?**

நல்வினை செய்த உயிர்கள் தூலதேகம் கழிந்தபின் தெய்வீக உடம்போடு உயர்த்தப்படுகின்றன; அவை மேல் உலகங்களிலே சென்று இன்பம் அனுபவிக்கின் றன. பாவம் செய்த உயிர்கள் பாவசரீரத்தோடு தாழ்த் தப்பட்டு நரகம் முதலிய கீழ் உலகங்களிற் சென்று துன் பத்தை அடைகின்றன.

**131. சுவர்க்க நரகங்களுக்குச் சென்ற உயிர் கள் என்ன செய்கின்றன?**

சுவர்க்கத்திற்குச் சென்ற உயிர்கள் தாம் செய்த நல்வினைக்குத்தக்க இன்பம் அநுபவித்துத் திரும்பவும் உலகத்திற்கு வந்து உயர்ந்த பிறவிகளை யெடுத்து வாழ் கின்றன.

நரகத்திற்குச் சென்ற உயிர்கள் தாம் செய்த தீவினைக்குத்தக்க துன்பம் அநுபவித்துத் திரும்பவும் உலகிற்கு வந்து இழிந்த பிறப்புக்கள் எடுக்கின்றன.

பாவபுண்ணியங்களற்று முத்தியைப்பெறும் உயிர்களும் உள்ளன.

## 132. எழுவகைப் பிறப்புக்கள் யாவை?

தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பவையாம்.

## 133. மனிதப்பிறப்பின் மாட்சி யாது?

உண்பதாலும், உறங்குவதாலும், மக்களைப் பெறுவதாலும், பேசுவதாலும், பகுத்தறிவுடைமையாலும் மனிதப்பிறவி மாட்சியுடையதாகாது; ஏனெனில், இவை மற்றைய பிறவிகளுக்கும் இருக்கின்றன. பின், மனித ஜன்மம் எக்காரணம்பற்றி மாட்சிமையுடையது எனின்:— சரியை, கிரியை, யோகம், ஞானமாகிய மார்க்கங்களால்* இறைவனை உணர்ந்து வழிபட்டு மோட்சத்தை அடைதற்குரிய இறைஞானம் மனிதர்க்குக் கிடைத்ததுபோல் மற்றவற்றிற்குக் கிடைக்கவில்லை யாகையால் மனித ஜன்மமே எல்லாப் பிறவிகளிலும் மாட்சிமையுடையதாயிற்று. ஆதலால் மனிதராய்ப் பிறந்த எவரும் மோட்ச மார்க்கத்திற்குரிய நெறிகளைக்

*சரியை, கிரியை, யோக, ஞானங்களை ஐந்தாம் பாடத்திற் கண்டுகொள்க.

கடைப்பிடித்து ஒழுகுதற்குரியர்; இலரேல், விலங்குகள் முதலிய உயிர்களிலிருந்து இவர் சிறிதும் வேற்றுமை யுடையர் அல்லர் என்பது விளங்கும்.

சரியையாதிகளுக்கு அடிப்படையாகிய நித்திய கருமங்களை அடுத்தபடியாக ஆராய்வாம்.

## 15. நித்தியகருமங்கள்

**134. இந்துக்கள் விதிப்படி எப்பொழுது தூங்கி எழுதல்வேண்டும் ?**

*விடிவதற்கு ஐந்து நாழிகைக்கு முன் எழுந்திருப்பது நலம். இரண்டரை நாழிகைக்கு முன்னுவது எழுந் திருக்கவேண்டும்.*

**135. காலையில் எழுந்தவுடன் செய்யவேண்டு வன யாவை ?**

*முகங்கழுவி, வடக்குத் திசையையாவது கிழக்குத் திசையையாவது பார்த்திருந்து விபூதி தரித்து, காலை ஜபஞ்செய்து, தோத்திரப் பாடல்கள் பாடி இறை வணக்கஞ் செய்தல் வேண்டும்.*

**136. நித்திய கருமத்தில் முக்கியமானவை எவை ?**

*மலங்கழித்தல், கால்கழுவுதல், பல்தேய்த்தல், குளித்தல், சுத்த ஆடை உடுத்தல், ஆலயம் செல்லுதல், உணவு உண்ணுதல், மாலைஜபம், உறக்கம் என்பனவாம்.*

**137. மலங் கழித்தலில் கவனிக்க வேண்டியவை எவை?**

(அ) காலை மாலைகளில் மலங்கழிக்கும் வழக்கத்தினைக் கைக்கொள்ளல் வேண்டும்.

(ஆ) மலங்கழிக்கும் இடம் ஊருக்கும் கோயில்களுக்கும் அப்பாற்பட்டதும், விசாலமானதும், ஈரமில்லாததுமா யிருத்தல்வேண்டும்.

(இ) லாகிரி உபயோகித்தால் மாத்திரமே மலங் கழியும் என்ற வழக்கத்தினை வைத்துக்கொள்ளுதல் கூடாது?

**138. கால் கழுவுதலில் கவனிக்க வேண்டியவை எவை ?**

(அ) மலங்கழித்தவுடன் காலலம்புதல் வேண்டும். கால் கழுவக் காலதாமதமாதல் கூடாது.

(ஆ) முட்டளவு தண்ணீரில் இறங்கியிருந்து பலமுறை தேய்த்துக் கழுவி, இரண்டு கைகளையும் குதத்தினையும் மணலால் தேய்த்துச் சுத்தம் செய்ய வேண்டும். முகங்கழுவி வாய் கொப்புளித்துக் கொள்ள வேண்டும்.

(இ) தண்ணீரால் கழுவாமல் காகிதம், ஓலை, இலை, வைக்கோல் இவற்றினால் எவ்வளவு தூரம் துடைத்தாலும் சுத்தமாகாது. ஆதலால், தண்ணீரால்

சுத்தம செய்து மணலால் தேய்த்துக் கழுவுதலே சுத்தமாம்.

**139. பல்தேய்த்தலில் கவனிக்க வேண்டியவை எவை ?**

வாய்கழுவி, மிளகு உப்பு முதலியவை கலந்த உமிக் கரியாலோ, பற்பொடியாலோ, ஆல் வேல் முதலியவற் றின் குச்சிகளாலோ, நாயுருவிவேர் முதலியவற்ருலோ நன்ருய் உள்ளும் புறமும் அழுக்குப்போகத் தேய்த்த பின் ஈர்க்கிளுல் நன்ருய் நாக்கு வழித்தல்வேண்டும். பலமுறை தண்ணீரால் கொப்புளித்து முகம் கைகால் நெஞ்சு முதலியவற்றைக் கழுவுதல் வேண்டும்.

**140. ஸ்நானம் எத்தனை வகைப்படும் ?**

குளிர்ந்த நீரில் குளித்தல், எண்ணெய் ஸ்நானம் செய்தல், வெந்நீரில் குளித்தல், கடல்நீராடல் என் பனவாம்.

**141. எப்போதெல்லாம் குளிக்கவேண்டும் ?**

தினமும் காலையிலும், ஆலயத்திற்குப் போகும் போதும், இறந்த வீட்டுக்குச் சென்ருலும், கிரஹணம் விட்ட உடனும், அசுத்த வேலைகளைச் செய்த பின்னரும், போகங்கழிந்த இரவு புலர்ந்தவுடனும், பெண்கள் தீண்ட லானல் மூன்ரும்நாளும், நாலாம்நாளும், மற்று எவ்வித அசுத்தங்களும், புலைகளும் தன்னைப் பாதிக்கிறபோதும் கட்டாயம் நீராடல் வேண்டும்.

142. நீராடும்போது கவனிக்க வேண்டியவை எவை ?

(அ) கோவணம், ஆடை இவையில்லாமல் நீராடுதல்கூடாது.

(ஆ) தலையிலோ, உடலிலோ எண்ணெய் தேய்த்துக்கொண்டால் குளிக்கும்போது அதைச் சீயக்காய், அரைப்பு, பயறு முதலியவற்றுள் எதைத் தேய்த்தாவது சுத்தம் செய்துவிட வேண்டும்

(இ) எண்ணெய் தேய்க்காது போனாலும் பயறு, ஈஞ்சை, நல்ல துணி முதலியவற்றுள் எதையாவது கொண்டு உடலை நன்றாய்த் தேய்த்து வியர்வைநாற்றம் முதலியன போகும்படி குளித்தல் வேண்டும்.

(ஈ) உடுத்திருந்த ஆடையை அவிழ்த்துவைத்துக் கொண்டு, நிர்வாணத்துடனே, கோவணத்துடன் மாத்திரமோ குளித்தல் கூடாது.

(உ) உடுத்திருந்த ஆடைகளைத் தண்ணீரில் நனைத்துத் துவைத்துக் கட்டிக்கொள்ளல் வேண்டும்.

(ஊ) உடலை நனைக்காமல் தண்ணீர்க் கரைகளில் நின்றுகொண்டு தலையை மாத்திரம் நனைத்தலும், தலையை நனைக்காமல் உடம்பைமாத்திரம் கழுவுதலும் கூடாவாம்.

(எ) குளிக்கும் துறையில் மலம் கழுவுதல் கூடாது. அளவுக்கு மிஞ்சி உமிக்கரி முதலியவற்றைக்

கொண்டுவந்து கொஞ்சம் தேய்த்துவிட்டு, மீதியைக் குளிக்கும் தண்ணீரில் போட்டுவிடக்கூடாது. கரைகளில் வைத்துப் பல்தேய்த்து, எச்சில், கக்கல், ஈர்க்கோல் முதலியவற்றைக் கரையில் கழித்துவிட்டே தண்ணீரில் இறங்கல்வேண்டும்.

(ஏ) மனிதர் குளிக்குமிடங்களில் ஆடுமாடு நாய் முதலிய பிராணிகளைக் குளிப்பாட்டக்கூடாது.

(ஐ) தீர்த்தம், குளத்துறை, சிறிய தடாகம் முதலியவற்றில் நீந்தலும், நீரைக்கலக்குதலும், சாடுதலும், உமிழ்தலும், சோப்பு முதலியவற்றைத் தேய்த்தலும் கூடாவாம்.

(ஒ) குளிக்கும் நீரைக் கங்கை, யமுனை முதலிய புண்ணிய நதிகளாகவும், இராமேசுவரம், கன்னியாகுமரி முதலிய புண்ணிய ஸ்தலங்களின் தீர்த்தங்களாகவும் நினைத்து, ஈசுவரத் தியானத்தோடு குளித்தல் வேண்டும்.

(ஓ) வாரம் ஒருமுறை எண்ணெய் தேய்த்துக் குளித்தல்வேண்டும். எண்ணெய் ஸ்நானம் வெந்நீரில் செய்வது நலம். எண்ணெய் நன்றாய்ப் போகும்படி சீயக்காய் தேய்த்துக் குளித்தல்வேண்டும். குளித்த பிறகு தலையில் எண்ணெய் தேய்க்கலாகாது.

(ஔ) அமாவாசை, பௌர்ணமி நாட்களில் கடல் நீராடுவது நலம். கடல்நீரை நமது பாவத்தைக் கழுவும்

பரிசுத்த நீராகவும், ஆண்டவனது அருள் நீராகவும் நினைந்து, அதில் தன் மனைவி மக்களைக் கைகோத்துப் பிடித்துக்கொண்டு, கடவுள் தியானத்துடனும், காலம் சென்ற தன் பிதிரர்களை எண்ணியும், அவர்களது பாவத்தைப்போக்கி முத்தி கொடுக்கும்படி கடவுளிடம் வேண்டியும் முழுகல்வேண்டும்.

அமாவாசை பௌர்ணமி நாட்களிற் கடலின் நிலையும் நமது உடலின் நிலையும் மாற்றம் அடைவதால் உடல் நலத்தின்பொருட்டும் கடல் நீராடல் இன்றியமையாதது. கடல் நீராட்டால் அநேக உள்ரோகங்களும் புறரோகங்களும் ஒழிகின்றன ; ஆதலால் கடல் நீராட்டு மிகப் பயனுடையதாகும். கன்னியாகுமரியில் பரத கண்டத்தின் கிழக்கு தெற்கு மேற்காகிய மூன்று புறங்களிலும் உள்ள கடல்களும் ஒருங்கு கூடுவதால் இவ்விடம் கடலாட்டுக்குச் சிறந்த இடமாகும்.

(க) கடல் நீராடுவதற்குமுன் சுத்தநீரில் குளித்திருப்பது நலம்.

(கா) குளித்து முடிந்ததும் தலை, உடல், இடைப் பாகங்கள் இவற்றைச் சுத்தமான துணியினால் நன்றாய்த் துடைத்துப் பின்னர் விபூதியணிந்து கடவுளை வணங்கி ஒரு சிறிது நீர் உட்கொண்டு தலையை வெயிலில் உலர்த்த வேண்டும்.

(கி) நோயாளிகள் வெந்நீரில் குளித்தல்வேண்டும். அதுவும் கூடாதாயின் நல்ல சுத்தமான துணியை

வெந்நீரில் நனைத்துப் பிழிந்து உடம்பை நன்ருய்த் துடைத்துக்கொண்டு திருநீறு பூசுதல் வேண்டும்.

**143. இவ்வாறு நீராடுவதால் எய்தும் பலன்கள் யாவை?**

நீராடுவதால் சரீரம் சுத்தம் அடைவதுமட்டுமன்றிச் சரீரத்திற்கு ஆரோக்கியமும் உண்டாகிறது; உற்சாகம் அதிகமாகிறது; மனம் பரிசுத்தமாவதற்கும், ஒருமைப்படுவதற்கும். இந்திரிய அடக்கத்திற்கும் உதவுகிறது; பல நோய்கள் நீங்குகின்றன; பசியுண்டாகிறது.

**144. சுத்த ஆடை என்பது யாது?**

தண்ணீரில் தோய்த்துலர்ந்த ஆடையே சுத்த ஆடையாகும். இரவில் தூங்கும்போது தரித்திருந்த ஆடை அசுத்த ஆடையாகும். அதைத் தோய்த்து உலர்த்தி உடுத்தல்வேண்டும். ஆலயதரிசனஞ் செய்யப் போகின்றவர்கள் இவ்வாறு துணிகளைத் தண்ணீரில் தோய்த்தே உலர்த்தி உடுத்துக்கொண்டு செல்லல் வேண்டும். நல்ல பட்டாடைகளைக் கோயில் உபயோகத்திற்கு மாத்திரம் பயன்படுத்திவந்தால் அவற்றைத் தண்ணீரில் தோய்த்துலர்த்த வேண்டும் என்ற அவசியமில்லை.

**145 எங்ஙனம் சயனித்தல் வேண்டும்?**

சயனத்திற்கு முன் வடதிசை நோக்கியிருந்து வழிபடு கடவுளை வணங்கி, வடக்கொழிந்த திசைகளில்

தலைவைத்து வலக்கை மேலாகச் சயனித்தல் வேண்டும். இரவிலே காலம்பெறச் சயனித்து, விடிய ஐந்து நாழிகைக்குள் எழுந்திருப்பது நலம்.

**146 இந்துக்கள் உணவுகொள்ளும் முறை யாது?**

குளிக்காமலோ, கால் கை முகங்களைக் கழுவாமலோ உணவு உண்ணுதல் கூடாது. உணவுப்பொருள்கள் பரிசுத்தம் உள்ளவையாக இருக்கவேண்டும். கோயிலுக்குப்போகும்போது மீன், மாமிசம், முட்டை முதலிய புலால்களை உண்ணக்கூடாது. தரையில் பலகை அல்லது தடுக்கின்மேல் வடக்குத்திசையொழிந்த மற்றதிசைகளைப் பார்த்து உட்கார்ந்து போசஜன பதார்த்தங்களைக் கடவுளுக்கு நிவேதனப்பொருளாக நிவேதித்து உண்ணல் வேண்டும். இலைகளில் உண்பது நலம். புசித்தபின் வெந்நீரேனும் தண்ணீரேனும் பானம்பண்ணல் வேண்டும். போஜனம் முடிந்ததும் வாய், கை, கால் முதலியவற்றை நன்றாய் அலம்பிக் கொள்ளவேண்டும். போஜனம் பண்ணிய இடத்தையும் சாணம் தெளித்துத் தேய்க்கவேண்டும்.

"புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை
வாய்மையாற் காணப் படும்."

—திருக்குறள்.

இதுகாறும் கூறியவாற்றால் ஒவ்வொரு இந்துவும் மேற்கூறிய நித்திய கருமங்களை எந்நாளும் நன்றாய்

அனுஷ்டித்து, காலை மாலைகளில் கடவுளை வணங்கி ஆலயங்களிலும் சென்று ஆண்டவனைப் பிரார்த்தித்து வரல் வேண்டும் என்பது தெரிகிறது.

## 16. சமயச்சின்னங்கள்

**147. இந்துக்கள் மத அடையாளமாக உடலில் அணிந்து கொள்ளுகின்றவை எவை?**

விபூதி, சந்தனம், உருத்திராக்ஷம், நாமம் முதலியனவாம்.

### விபூதி

**148. விபூதி என்பது யாது?**

புல்வெளியில் மேய்ந்த இளம் பசுவின் சாணத்தை அக்கினியால் நீற்றி எடுக்கும் பொடியே விபூதியாம்.

**149. விபூதியை வைத்துக்கொள்வதெப்படி?**

புதுத்துணியால் வடிகட்டி மணமுள்ள புஷ்பங்களை இட்டு, புதுப்பானைகளில் வைத்துக்கொண்டு அவசியத்திற்குத் தக்கபடி பட்டுப்பையிலாவது சம்புடத்திலாவது எடுத்து வைத்துக்கொள்ளல் வேண்டும்.

**150. விபூதியணிவதின் அவசியமென்ன?**

அசுத்தங்களைச் சாணம் அகற்றுவது யாவரும் கண்டறிந்த உண்மை, அதுபோலவே நமது உடலி லுள்ள அசுத்தங்களை அகற்றவும் சாணத்திலிருந்து தயாரிக்கப்படும் விபூதி மிகவும் அவசியமானதாகும். சிரசிலுள்ள நீர்த்தோஷம், தலைவலி முதலியவற்றை அகற்றவும் இது பயன்படுகிறது.

அன்றியும் இத்திருநீறு "முடிவில் யாவரும் பிடி சாம்பராவர்" என்ற உண்மையை நமக்கு உணர்த்தி, "நீயும் இத்தகைய நீருய்ச் சிறிது காலத்துக்குள் முடிவாய் ஆதலால் உன் வாழ்க்கை தூய்மையுடனும் இறைவன்மீது உற்ற பற்றுடனும் இருத்தல்வேண்டும்" என நம்மை எச்சரிக்கின்றது. பசுவின் மலம் நீருகிய பின்னரே ஜீவன் சிவனுகிறுன் என்ற தத்துவத்தையும் இது வெளிப்படுத்துகிறது. எனவே, விபூதி மதசம்பந்த மாகவும், ஆரோக்கிய சம்பந்தமாகவும் பயன்படுதலின் நமக்கு இது இன்றியமையாததாகும்.

### 151. விபூதியைத் தரிப்பதெப்படி?

வடக்கு முகமாகவேனும் கிழக்கு முகமாகவேனும் நின்று பூமியில் விபூதி சிந்தாதபடி மூன்று விரல்களால் எடுத்து அண்ணாந்து சிவசிவ என்று சொல்லி, சிவனைத் தியானித்துப் பூசுதல்வேண்டும்.

### 152. எப்போதெல்லாம் விபூதி அணிதல் வேண்டும்?

காலை மாலைகளிலும், குளித்தவுடனும். பூஜைக்கு முன்னும், ஆலய வழிபாட்டிற்கு முன்னும், சாப்பாட்டிற்கு முன்னும் அணிதல் வேண்டும்.

**153. விபூதியை நீரில் குழைத்துப் பூசுவது எங்ஙனம்?**

சமய தீக்ஷை முறைப்படி விபூதி தரிப்பதுதான் தகுதியுடையது. எனினும் தீக்ஷை பெற்றுக் கொள்ளும் வரை விபூதியைத் தண்ணீரிலே குழைத்து,

"ஈசான மூர்த்தியே நம:" என்று சொல்லிச் சிரசிலும்,
" தத்புருஷ வக்த்ராய நம:" என்று சொல்லி நெற்றியிலும்,
"அகோர ஹிருதயாய நம:" என்றுசொல்லி மார்பிலும்,
"வாமதேவ குஹ்யாய நம." என்று கொப்பூழிலும்,
" ஸத்யோஜாத மூர்த்தயே நம:" என்றுசொல்லிப் புஜங்களிலும், கை முட்டுகளிலும், மணிக்கட்டுகளிலும், இடுப்புகளிலும், கால் முட்டுகளிலும் தரித்துக்கொள்ளுதல் வேண்டும்.

**154. விபூதி பூசியபின் யாது செய்தல் வேண்டும்?**

தீக்ஷை பெற்றவர்கள் குரு உபதேசித்தபடி ஸ்ரீ பஞ்சாட்சர மந்திரத்தினைப் பலமுறை ஜபித்துக் கடவுளை வணங்கல்வேண்டும்.

## உருத்திராக்ஷம்

**155. உருத்திராக்ஷம் என்றால் என்ன?**

சிவபெருமானது மூன்று திருக்கண்களிலிருந்தும் பொழிந்த நீரில் தோன்றியதாக எண்ணிச் சிவனடியார்கள் அணிந்துகொள்ளும் மணிக்கு உருத்திராக்ஷம் என்று பெயர்.

## 156. உருத்திராக்ஷத்தின் பெருமைகள் யாவை?

நல்ல உருத்திராக்ஷத்தை உரைத்துப் பார்த்தால் பசும்பொன்னின் மாற்றிருக்கக் காணலாம். இதனுள் மக்கள் உடலுக்கு நன்மை பயக்கும் சில பொருள்கள் இருக்கின்றனவென்றும், இதனை உரைத்து மருந்தோடு கலந்து குடித்தால் பல நன்மைகள் உண்டாகின்றன வென்றும், மருத்துவ நிபுணர்கள் கூறுகின்றார்கள். இவற்றிலிருந்து உருத்திராக்ஷம் உடலுக்குப் பல நன்மை பயக்கின்றது என்று விளங்குகின்றது. உருத்திராக்ஷத்திற்பட்டு உடலிற் பாயும் நீர் மிகவும் புனிதமானது.

" இலங்குமாமணி உருத்திர அக்கம் ஒன்றணியில்
விலங்கெயிற்று வெம்பூதங்கள் முதலிய மேவா "

என்றபடி உருத்திராக்ஷம் அணிபவரை எவ்வித உபாதிகளும் வந்தடையமாட்டா.

## 157. உருத்திராக்ஷத்தில் எத்தனைவகையுண்டு?

ஒரு முகமணி முதல் பதினாறு முகமணிவரையுண்டு. கழுத்தில் முப்பத்திரண்டு மணிகளை ஒருங்கு சேர்த்து மாலையாக அணியலாம். மார்பில் நூற்றெட்டுப் பொடி மணிகளை மாலையாகக் கோத்து ஜபத்திற்கும் பயன்படும்படி தரித்துக் கொள்ளலாம்.

## 158. சந்தனம் அணிவதேன்?

சந்தனம் மிகக் குளிர்ச்சியுடையதும் மணமுடையது மாகும். அஃது உடலிலுள்ள வெப்பத்தை நீக்கித் தண்மையைத் தந்து உற்சாகத்தை உண்டுபண்ணுகிறது. பல நரம்புகள் புருவ மத்தியில் ஒன்று கூடுவதால் அவை கட்கு வெப்பம் ஏற்படாதிருக்கக் குளிர்ச்சியுடைய சுகந்தத் திலகம் அணிதல்வேண்டும். பரமசிவனது நெற்றிக்கண்ணை நினைப்பூட்டுவதற்கும் அடியார்கள் திலகம் அணிந்து கொள்ளுகின்றனர்.

## 159. நாமம் அணிவதேன்?

நாமம் ஒருவகைத் திருமண்ணால் இடப்படுவது எல்லாம் முடிவில் மண்ணாய்விடும் என்பதை இது உணர்த்துகின்றது. அன்றியும். இறைவனது திருவடி யல்லாது உயிர்களுக்கு வேறு கதியில்லை என்பதை உணர்த்தத் திருமாலின் திருவடியின் சாயலாய்த் திருமா லடியார்கள் இதனை இடுகின்றார்கள்.

எனவே, இந்துமதச் சின்னங்களாகிய விபூதி, உருத்திராக்ஷம், சந்தனம், நாமம் முதலியவற்றில் எவற்றையேனும் இந்துக்கள் ஒவ்வொருவரும் அணிந்து இறைவன் திருவடிக்கு ஆளாகவேண்டும் என்பது பெறப்படும்.

## 17. ஒழுக்கமுடைமை

**160. இந்து மதத்தினர் கைக்கொண்டொழுக வேண்டிய நல்லொழுக்கங்கள் எவை?**

வாய்மை, கொல்லாமை, களவு செய்யாமை, கள் குடியாமை, விபசாரம் செய்யாமை, இனியவைகூறல், செய்நன்றி யறிதல், பொறையுடைமை, புறங்கூறுமை முதலியவையாம். இவற்றின் விரிவைத் திருக்குறள் முதலிய நீதிநூற்களிற் காண்க.

**161. தீயவொழுக்கத்தால் எய்தும் தீமைகள் யாவை?**

உயிர்கள் தியவொழுக்கத்தால் பாவிகளாகி நரகத் துன்பங்களை அனுபவித்து மேலும் மேலும் பல இழிந்த பிறப்புக்களை எடுத்துத் துன்புறுமாகையால் தீய வொழுக்கம் தீயினும் அஞ்சத்தகுந்ததாகும்.

**162, நல்லொழுக்கத்தின் அவசியம் யாது?**

நீர் முதலியவற்றுல் புறச்சுத்தம் உண்டாகின்றது போல் நல்லொழுக்கங்களால் அகச்சுத்தம் உண்டா கின்றது. புறச்சுத்தமும் அகச்சுத்தமும் உடையவர் களே இறைவணக்கத்திற் குரியவராவர். இம்மூன்று தன்மையுமுடையவரே இறையருள் பெறுவர். ஆகை யால் இம்மூன்றனுள்ளும் நடுநின்ற நல்லொழுக்க முடைமை இன்றியமையாததாகும்.

எனவே எவ்வளவு புறச்சுத்தம் உடையவராயினும், எவ்வளவு சமயச் சின்னங்களை அணிந்தவராயினும் நல்லொழுக்கம் இல்லாதவரானால் இறையருள் பெற முடியாதவராய் அழிவர் என்பது பெறப்படும்.

## 18. ஆலயபூஜை விளக்கம்

**163. பூஜை என்பதன் பொருள் என்ன?**

*பூஜை என்பதற்கு ஞானத்தை உண்டாக்கக்கூடிய சாதனம் என்பது பொருள்.*

**164. பூஜை எத்தனை வகைப்படும்?**

*ஆன்மார்த்த பூஜை அல்லது தான் மாத்திரம் உய்வதற்காகச் செய்யும் பூஜை எனவும், பரார்த்த பூஜை அல்லது பிறர் உய்வதற்குச் செய்யும் பூஜை எனவும் இருவகைப்படும்.*

**165. ஆன்மார்த்தமாவது யாது?**

*தீக்ஷை பெறுங் காலத்தில் குரு உபதேசப்படி தனது நன்மையைக் கருதிச் செய்துவரும் பூஜையாம்.*

**166. பரார்த்தமாவது யாது?**

பாராயணஞ் செய்வது உலகினர் வெளிப்படையாகத் தெளிவதற்காகத் தேவர்கள், ரிஷிகள், அசுரர்கள் முதலியவர்களால் தாபிக்கப்பட்ட ஆலயங்களில் பூஜிப்பதாம்.

**167. பூஜை செய்வதற்கு முன் செய்ய வேண்டுவது யாது?**

ஆன்மசுத்தி, ஸ்தானசுத்தி, திரவியசுத்தி, மந்திர சுத்தி, இலிங்கசுத்தி ஆகிய பஞ்ச சுத்திகளையும் செய்தல் வேண்டும்.

**168. இப்பஞ்ச சுத்தியின் அவசியமென்ன?**

இத்தகைய ஐந்துவிதச் சுத்திகளையும் செய்வது ஆணவம், கன்மம், மாயை, திரோதாயி, மாயேயம் என்ற ஐவகைப் பாசங்களைக் களைதல் என்னும் கருத்துப் பற்றியேயாம். இதனை

"பஞ்சவித சுத்தியினைப் பண்ணிடுக பாங்காகப்
பஞ்சவித பாசமறுப் பார்"

என்னும் சைவசமயநெறிச் செய்யுளால் அறிக.

**169. அபிஷேகப் பொருள்கள் எவை?**

வடித்தெடுத்த நீர், வாசனைத் திரவியங்கள் கலந்த நீர், இளநீர், பன்னீர், எண்ணெய், பால், பஞ்சாமிருதம். விபூதி, சந்தனம், களபம், புஷ்பம் முதலியவையாம்.

**170. அபிஷேகம் செய்யவேண்டிய அவசியம் என்ன?**

இதன் உண்மை "அருளென்னும் புதவினை யாட்டி" என்று காசி காண்டத்தில் கூறியபடி திருவருள் ஞானமே நீரெனப் பாவித்து அபிஷேகஞ் செய்யின் மலநிவாரணம் ஏற்படும் என்பதாம்.

"தம்மிற் சிவலிங்கங் கண்டதனைத் தாம வணங்கித்
தம்மன்பால் மஞ்சனநீர் தாமாட்டி"

என்றபடி மருட்போதமே மலமாதலால் அம் மல வசத்தத்தை அன்பென்னும் அருள்நீர்கொண்டு சுத்தி செய்தல் என்னும் பாவனையாம்.

**171. திருவுருவங்களுக்கு ஆடைகட்டுவது ஏன்?**

திரோதான சக்தி நீங்குதல் என்னும் பாவனை யாகும்.

**172. பூஜையில் செய்யப்படும் உபசாரங்கள் யாவை?**

பூஜையில் செய்யப்படும் உபசாரங்கள் பதினாறும். அவையாவன; ஆவாஹனம், தாபனம், சந்நிதானம், ஸந்நிரோதனம், அவகுண்டனம், தேனுமுத்திரை, பாத்தியம், 'ஆசமநீயம், அருக்கியம், புஷ்பதானம், தூபம், தீபம், நைவேத்தியம், பாநீயம், ஜப சமர்ப்பணை, ஆராத்திரிகம் (தீபாராதனை) என்பனவாம்.

**173. ஆவாஹனமாவது யாது?**

பூஜையின் பொருட்டுக் கடவுளை மூலமந்திரத்தைச் சொல்லி வரவழைத்து அபிமுகமாகச் செய்தல் ஆவாஹனமாகும்.

174. தாபனமாவது யாது?

"தயாநிதியே! அடியேனை அநுக்கிரகிப்பதற்காக விக்ரகத்தில் எழுந்தருளி இருக்கவேண்டும்" என்று அன்புடன் யாசிப்பது தாபனமாகும்.

175. ஸந்நிதானம் என்பது யாது?

பூஜிக்கப்படுபவனுகிய கடவுள், அநுக்ரகிக்கும் தன்மையையும், பூஜிக்கின்றவனுகிய தான் அநுக்ரகிக்கப்படும் தன்மையையும் உண்டு பண்ணுவதே ஸந்நிதானமாகும்.

176. ஸந்நிரோதனமாவது யாது?

"பகவானே! எப்போதும் என்னிடத்தில் அநுக்ரகத்தோடு இருக்கவேண்டும்" என்று பிரார்த்திப்பதே ஸந்நிரோதனமாகும்.

177. அவகுண்டனமாவது யாது?

சிவலிங்கத்தைச் சுற்றிக் கவச மந்திரத்தினல் மூன்றகழ் உண்டானதாகப் பாவித்தல்.

178. தேனுமுத்திரை என்பது யாது?

கடவுளுக்கு முன்பாகப் பசுவின் மடிபோன்றதொரு முத்திரை காட்டுதலே தேனுமுத்திரை யாகும்.

**179. பாத்தியமாவது யாது?**

மூல மந்திரத்தை 'நம:' என்னும் இறுதியை உடையதாக உச்சரித்து ஜலத்தைத் திருவடிகளிற் சமர்ப்பித்தலாம்.

**180. ஆசமநீயம் என்பது யாது?**

மூல மந்திரத்தை 'ஸ்வதா' என்னும்' இறுதியை உடையதாக உச்சரித்து ஐந்து தடவை மும்மூன்று தரம் ஜலத்தைச் சமர்ப்பித்தலாம்.

**181. அர்க்கியம் என்பது யாது?**

மூல மந்திரத்தை உச்சரித்துக் கடவுளுடைய சிரங்களில் ஜலத்தைச் சமர்ப்பித்தலாம்

**182. புஷ்பதானம் என்பது யாது?**

மூல மந்திரத்தை உச்சரித்துப் புஷ்பங்களைச் சாத்துதல் புஷ்பதானமாகும்.

**183. தூபமாவது யாது?**

கிரியாசக்தி ரூபமாகிய தூபத்தைச் சிவசக்தி தானத்திலிடுவது, ஆணவ மலமாகிய அறியாமையைக் கிரியா சக்தியைக்கொண்டு நீக்குதல் எனும் குறிப்பினை உணர்த்துவதற்காகும்.

**184. தீபமாவது யாது?**

சிவபெருமானுக்குத் தீபம் சமர்ப்பித்தலின் கருத்து, சித்சக்தியாகிய தீபம் ஆன்மாவினது மலத்தைப் போக்கி ஞானத்தை விளக்குதல் என்பதாம்.

**185. நைவேத்தியமாவது யாது?**

ஆன்ம குணமாகிய அகங்காரம், சங்கற்பம், குரோதம், மோகம் என்பவற்றையே அமுதாகச் சமர்ப்பித்தல் என்னும் பாவனையாகும்.

**186. பாநீயம் என்பது யாது?**

வாசனை பொருந்திய தீர்த்தத்தைக் கடவுளுடைய திருப்திக்காகச் சமர்ப்பிப்பது.

**187. ஜப சமர்ப்பணம் என்பது யாது?**

மூல மந்திரத்தை நூற்றெட்டு உரு ஜபித்து அதைக் கடவுளிடத்திலேயே ஒப்புவித்தல் ஜப சமர்ப்பணமாம்.

**188. ஆராத்திரிகம் என்பது யாது?**

அதாவது தீபாராதனை; பலவகையான தீபங்களைக் கடவுள் முன்பாகக் காட்டுதல். ஒவ்வொரு தீபத்திற்கும் ஒவ்வொரு கருத்து உண்டு. அவற்றுள் முக்கியமானவை ஐந்து தட்டுக்களும், குடமுமாம். இவற்றின் கருத்தாவது: ஐந்து தட்டுக்கள் ஈசான முதலியவற்றையும், குடம் சாதாக்கிய தத்துவத்தையும் குறிக்கின்றமையால் ஈசானம் முதலியன சாதாக்கியத்தில் சிவத்திடத்தே ஒடுங்குகின்றது என்பதாகும்.

**189. கடைசியாகக் கற்பூரம் காட்டப்படுவது என் ?**

கர்ப்பூரம் வெண்மைநிறத்தைப் பொருந்தி, அக்கி பற்றியவிடத்தே அதன் வடிவமாக விளங்கி, ஒரு பற்று மில்லாமல் முற்றுங் கரையப்பெற்று ஆகாயத்துடன் கலந்து விடுவதுபோல், ஆன்மாவானது சத்துவ குணத்தை அடைந்து ஞானமாகிய அக்கியுடன் சம்பந்தம் பெற்று மூவகைச் சரீரங்களும் எல்லாப் பற்றுக்களும் நீங்கப்பெற்று, பரமுத்தியடைதல் என்னும் பாவனையாம்.

**190. அஷ்டபுஷ்பம் சாத்துதலின் கருத்து என்ன ?**

கொல்லாமை, ஐம்பொறி யடக்கல், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்பவையே கடவுளுக்குகந்த மலர்கள் என்னும் பாவனையாம்.

**191. இவ்விஷயங்களை நாம் அறிந்து கொள் வதால் உண்டாகும் பயன் யாது ?**

இத்தகைய பூஜைகள் ஆலயங்களில் நடைபெறும் போது, அவற்றின் கருத்தினை நாம் அறிந்து ஆராதனை செய்தாலொழிய அவை நமக்கு எவ்வகைப் பயனையும் தாராவாகையால் அவற்றின் பொருளை நாம் நன்கறிந் திருத்தல் வேண்டும்.

## 19. திருவிழாத் தத்துவங்கள்

**192. திருவிழாவாவது யாது?**

ஆலயங்களில் பத்து அல்லது பன்னிரண்டு நாட்கள் மிகச் சிறப்பாகப் பூசைகள் நடத்தி அங்குள்ள மூர்த்தி களின் திருவுருவங்களைப் பலவித வாகனங்களின்மேல் எழுந்தருளச்செய்து நடத்துவிக்கும் விழாவுக்குத் திரு விழா என்று பெயர். இதனை மகோத்ஸவம் எனவும் கூறுவர்.

**193. மகோத்ஸவம் என்பதன் பொருள் என்ன?**

மஹா = பெரிய

உத் = உயர்வான

ஸவ = சிருஷ்டி முதலிய காரியங்கள்.

உயர்ந்த சிருஷ்டி முதலிய ஐந்தொழில்களைக் குறிக்கும் குறி என்பதாம்.

**194. திருவிழாக்கள் பல ஊர்களில் பலவித மாக நடைபெறக் காரணமென்ன?**

காரணாகமம், காமிகாகமம், வாதுளாகமம் முதலிய பல ஆகமங்களை அடிப்படையாகக்கொண்டு விழாக்கள் நடைபெறுவதால் உத்ஸவங்களும் பலமாதிரியாக நடை பெறுகின்றன.

**195. திருவிழா ஆரம்பிப்பதற்கு முந்திய நாள் மண்ணெடுப்பதும் முளையிடுவதும் எதைக் குறிக்கின்றன?**

*மண்ணைப் பதம்பண்ணி வித்திடுவது சிருஷ்டியைக் குறிக்கின்றது.*

**196 கொடியேற்றம் எவ்வாறு நடைபெறுகிறது?**

*ரிஷப உருவத்தை ஒரு துணியில் எழுதி அதற்குப் பூஜைகள் செய்து கயிற்றில் கட்டிக் கொடி மரத்தின் உச்சிக்கு ஏற்றுவது கொடியேற்றமாம்.*

**197. கொடியேற்றத்தின் தத்துவம் யாது?**

*(அ) சமம், விசாரம், சந்தோஷம், சாதுசங்கமாகிய நான்கு குணங்களையும் கால்களாகவுடையது நந்தி. அது வெள்ளை நிறம் பொருந்திய பரிசுத்த தர்மதேவதை. அதனை ஒப்ப ஆன்மாக்கள் பரிசுத்தம் உடையவர்களாகி, அந்நான்கு குணங்களையும் உடையவர்களானால், அவர்களை இறைவன் அவர்களிருக்கும் நிலையிலிருந்து மிக உயர்த்திவிடுவான் என்பதை இது குறிக்கின்றது*

*(ஆ) திருவிழாவின் முதல்நாளில் இக்கொடியேற்றுதலின் நோக்கமாவது, திருவிழாவிற்கு வரும் அடியார்களை உயர்வுடையவர்களாகச் செய்வதற்காக இறைவன் இவ்விழா நாட்களில் சிறப்பாக எழுந்தருளி அருள் செய்யப் போகின்றான் என்பதாம்.*

**198. விருஷபவாகனத் தத்துவம் யாது?**

இதை 'விருத்திக் கிரம சிருஷ்டி கோலம்' என்பர். மரத்தின் இலைகள் கிளைகள் முதலியனபோல, தத்துவங் களையும், எல்லா விதமான ஜீவராசிகளையும் கடவுள் விளக்குகிறார் என்பதை இது குறிக்கின்றது. மரத்தின் வேரி[illegible] அதில் [illegible] கடவுள் விளங்குகிறார். அஃதாவது, இத்தனைய சிருஷ்டிக் கெல்லாம் வேராக இருப்பது அருள் என்ற சக்தியோடு கூடிய அறிவு என்ற சிவமே யென்பதாம்.

**199. சூரியப் பிரபை, சந்திரப் பிரபைகளில் இறைவன் எழுந்தருளி வருவது எதைக் குறிக் கின்றது?**

இது "விருத்திக் கிரம ஸ்திதிக் கோலம்" உலகத்திலுள்ள உயிர்கள் பிழைத்து இருப்பதற்குக் காரணம் சூரிய வெப்பம். அவ்வெப்பம் இல்லாவிட்டால் புசிப்பதற்குப் புல்லும் கிடைக்காது. அவ்வெப்பமே கடலில் நீரையுண்டு மேகங்கள் மூலமாய் மழையைத் தருவிக்கின்றது. இன்னும் எல்லாவகையான தொழில் களுக்கும் அது மூலசக்தியாய் விளங்குகின்றது. எனவே உலகத்தைக் காப்பாற்றுவது சூரியனது தொழில். சந்திரன் இன்பத்தைத் தருபவன். ஆகையால் சூரியப் பிரபையிலும் சந்திரப் பிரபையிலும் இறைவனை வைத்து வணங்குதல் ஸ்திதித் தொழிலுக்கு அறி குறியாம்,

**200. நந்தியின் மேலும் பூத வாகனத்தின் மேலும் இறைவன் எழுந்தருளி வருவது எதைக் குறிக்கின்றது?**

மான், மழு, சதுர்ப்புஜம், திரிநேத்ரம் முதலிய அடையாளங்களையுடைய சாரூப்பிய பதவி பெற்ற விஞ்ஞான கலர் என்ற ஆன்மவர்க்கத்தைச் சேர்ந்தவர் அதிகார நந்தி என்பவர்.

பூதகணங்களோ எனின், இறந்தவுடன் ஆன்மாக்களைக் கொண்டுபோகும் தொழிலுடையன. இவ்விரண்டு வாகனங்களின்மேலும் இறைவன் ஏறிவருவது சங்காரத்திற்கு அறிகுறியாகும்

**201. நாகப்பாம்பு வாகனம் எதை உணர்த்துகின்றது?**

நஞ்சு, மாணிக்கம், படமாகிய மூன்றையும் மறைத்து, வேண்டும்போது வெளிப்படுத்தும் திறமையுடையது பாம்பு. அல்லாமலும் இது, தானும் மறைந்திருந்து வேண்டும்போது புற்றிலிருந்து வெளிவரும் தொழிலுடையது. எனவே நாகப்பாம்பு வாகனம் மறைத்தற்றொழிலாகிய 'திரோபவம்' என்பதற்கு அறிகுறியாகும். குண்டலி சத்தி, சுழுமுனைநாடி முதலியவற்றோடு ஒப்பிட்டும் தத்துவம் கூறுவர்.

**202. ரிஷபவாகனக் காட்சி சிறந்த காட்சியானதேன்?**

சிவனடியார்களுக்கு இறைவன் ரிஷபவாகனாரூடராகவே காட்சி கொடுத்திருக்கிறானென்று அறிகிறோம். ரிஷபம் எவ்வகையான மாசுமற்றது. சுத்த வெள்ளை நிறமுடையது. சமம் முதலிய நான்கு குணங்

களைக் கால்களாகவுடையது. ஆணவ மலத்தை ஒழித்து அருளொடு கூடிய அறிவைப் பணிவுடன் ஏற்று நிற்கின்றது. ஆன்மாக்கள் இங்ஙனம் ஆகும்போதுதான் இறைவன் பேரருள் சுரக்கிறுன். ஆகையால் இக்காட்சி அநுக்ரக காட்சியாயிற்று; எனவே இது சிறந்ததாம்.

**203 ஆரும் திருவிழாவில் இறைவன் யானை மீது வரும் காட்சியின் தத்துவம் என்ன?**

இது 'லயக்கிரம (ஒடுங்கும் முறை) சிருஷ்டி கோல'மாகும். மரம் சிருஷ்டியை உணர்த்துவதுபோல விரிந்த பாகுபாடுகளெல்லாம் ஒடுங்கி ஒரே பிண்டமாகப் பருமனுன உடம்பு கால்களையுடைய யானையைப்போல் ஒடுங்கிவிடுவது லயக்கிரமத்தில் கடைசிப் படியாகவுள்ள சிருஷ்டியைக் குறிக்கிறது.

**204. கைலாச பர்வத வாகனம் எதை உணர்த்துகிறது?**

இராவணன் ஆணவமலம் நிறைந்த உயிர்; இமய மலை பிரபஞ்சம், இராவணன் இமயமலையைத் தூக்க முயல்வது ஆணவம் பிரபஞ்சத்தை அறிந்து இன்புற முயல்வதற்கு உவமையாகின்றது. இராவணன் அவ்வாறு தூக்கமுடியாமல் துன்பம் அடைந்தான். அவ்வாறே ஆணவமலம் நிறைந்த உயிரும் இறுதியில் ஆணவத்தை இழந்து, கடவுளைத் தியானித்து, வரம் பெற்று, இறைவன் திருவடி சார்ந்து இன்புறுகிறது. இதனையே இவ்வாகனம் உணரச்செய்கிறது.

**205. நடராஜர் உற்சவத்தில் அடங்கிய தத்துவங்கள் எவை ?**

நடராஜர் திருவுருவத்தில் பஞ்ச கிருத்தியங்கள் உள்ளனவென்பது 'தோற்றம் துடியதனில்' என்ற பாடல் மூலம் விளங்கும். அஃதாவது, சிருஷ்டி உடுக்கையிலும், ஸ்திதி அபயஹஸ்தக் கையிலும், சங்காரம் எரிதாங்கிய கையிலும், திரோபவம் ஊன்றிய காலிலும், அநுக்ரகம் தூக்கிய காலிலும் குறியீடாக வுள்ளனவென்று சிவஞான சாத்திரங்கள் கூறுகின்றன. இங்ஙனமே நடராஜர் உற்சவத்திலும் பஞ்ச கிருத்தியங்கள் உள்ளன. சபையை விட்டுப் புறப்படுதல் சிருஷ்டி; அபிஷேகம் ஸ்திதி; சாந்தணிதலும் அலங்கார தீபாராதனையும் சம்ஹாரம்; வெள்ளைச் சாத்துப்படி திரோபவம்; வீதிவலம் வந்து மட்டையடி தரிசனம் அநுக்ரகம்.

**206. தேரின் தத்துவங்கள் யாவை ?**

தேரின் அமைப்பு அண்டபிண்டத்தின் சமானம் விசுவ விராட் சொரூபமே எட்டு அடுக்குகளாகும். உச்சியிலிருக்கும் கும்பம் சோடசாந்தம்; அதற்கடுத்த கீழடுக்கு துவாதசாந்தம்; அதற்கடுத்தது மஸ்தக ஆதி ஸ்தானம்; அதற்கடுத்தது மஸ்தக மத்திய ஸ்தானம்; அதற்கடுத்தது மஸ்தக அந்தஸ்தானம்; அதற்கடுத்தது புருவ மத்தியஸ்தானம்; நடுவில் தாங்கும் நான்கு கால்கள் தத்துவக்கால்கள்; முன் மூன்று படிகள் மூன்று கண்கள். பின்னாலை சிகையும் இடைவெளி காது

களுமாகும்; இறைவன் எழுந்தருளியிருக்கும் கோடிய பீடம் மூலாதாரம்; குதிரைகள் சூரிய சந்திர கலைகள்; சாரதி புத்திகளே, இவை நாபியாகும்; அடுத்த அடுக்கு கண்டஸ்தானம்; அதை யடுத்த அடுக்கு இருதய ஸ்தானம்; அதை யடுத்த அடுக்கு நாபி; அதற்கடுத்த அடுக்கு குண்டலிஸ்தானம்; பத்துச் சக்கரங்களும் தச வாயுக்கள் இறைவன் இதற்குக் கர்த்தா தானொருவனே என்றுணர்த்தி இவ்வாறமைந்த பிண்ட ரூபமா சரீர மாகிய இரதத்தில் தசவாயுக்களாகிய சக்கரங்களை நிறுத்தி, அசைவற்ற மனத்தை உந்தி, குண்டலியி லிருந்து நாபிக்கும், அதிலிருந்து கண்டத்திற்கும், அதிலிருந்து வாய்க்கும் ஏற்றி லயப்படுத்தி, முறையே இரதத்திரையாம் நாசிக்கும் அங்கிருந்து கண் வழி யாகவும், நடுவழியாகவும் மேல்நோக்கி ஆறாம் அடுக் காகிய புருவ மத்திக்கும் ஏற்றி லயப்படுத்தி, சும்மா யி[illegible] [illegible]ிருந்து [illegible] சிவமாய் இருந்திடல் வேண்டும் என்ற லயக்கிரமத்தைக் காட்டுகிறது. மேலும் தேர் திரிபுராதிகளைச் சிவன் சிரித்து எரித்தது ஆன்ம கோடிகளைக் காப்பாற்றிய ஸ்திதித் தொழிலுக்கும் அறிகுறியாகிறது.

**207. பிக்ஷாடனர் திருக்கோலம் எதை உணர்த்து கிறது?**

தாருகா வனத்து ரிஷிகளும், ரிஷி பத்தினிகளும் ஆணவமலத்தால் தாங்கள் சுதந்திரர்களென எண்ணிக் கடவுளை மறந்தனர். அவர்கள் பரதந்திரர்களென உணர்த்துதற் பொருட்டு இறைவன் பிக்ஷாடன மூர்த்தி

யாய்ச் செல்ல, ரிஷி பத்தினிகள் அவரழகில் ஈடுபட்டனர். விஷ்ணு மோகினியாகச் செல்ல அவ்வழகில் ரிஷிகள் ஈடுபட்டனர். இவ்விரண்டு செயல்களாலும் ரிஷிகளும், அவர் பத்தினிமார்களும் பரதந்திரர்களே என அவர்களை உணரச்செய்து பரமன் மறைந்தருளினன். இவ்வநுக்ரக பராக்ரமக் கோலமே பிக்ஷாடனக் கோலமாகும்.

**208. தீர்த்தவாரியின் கருத்தென்ன?**

இறைவனது அநுக்ரகம் பெற்ற உயிர்கள் அவனது அருட்பெருக்கில் அமிழ்வதைக் குறிக்கின்றது. நீராடி ஆலயத்தினுள் சென்று வணங்குவது மோட்சம் அடைதலைக் குறிக்கின்றது.

இத்தகைய தத்துவங்களைப் பத்துநாள் விழாவிலும் எண்ணி எண்ணிப் பரமனைப் பரவுவார் பரகதியடைவார் என்பதற்கு ஐயம் உளதோ?

## 20. ஆலய வழிபாடு செய்யும் முறை.

**209. ஆலயங்களுக்கு எவ்வாறு நாம் போக வேண்டும்?**

முன்கூறியபடி தேக சுத்திகள்செய்து நீராடி சமயச் சின்னங்களணிந்து தோய்த்துலர்ந்த ஆடைகட்டிச் செல்லவேண்டும். கோயிலின் பக்கத்திற் சென்றதும்

கை கால்களைக் கழுவிக்கொண்டு கோபுரத்தின் முன் சென்று நின்று இரண்டு கரங்களையும் தலைமேற் குவித்து மூல மந்திரத்தை உச்சரித்துக்கொண்டும் அறுட்டாக்களைப் பார்த்துக்கொண்டும் வேறு விசாரங்கள் ஒன்றுமில்லாமல், கோபுரத்தை ஸ்தூல லிங்கமாகவும், கடவுள் பாதங்களாகவும், பாவித்து வணங்கிக் கோயிலுட் போகவேண்டும்.

**210. கோயிலுட் செய்யத்தகாத வேலைகள் எவை?**

துப்பல், மூக்குச் சிந்துதல், மலஜலங் கழித்தல், தலை கட்டுதல், தலையில் சீலை கட்டிக் கொள்ளுதல், அபான வாயுவிடுதல், சட்டை, தொப்பி, செருப்பு இவை மாட்டிக் கொள்ளுதல், சுருட்டுக் குடித்தல், வம்பு பேசுதல், சிரித்தல், விளையாடுதல், சண்டையிடல், பலி பீடங்களை மிதித்தல், வெற்றிலை போடுதல், எச்சிலாக்குதல் முதலியனவாம்.

**211 கொடிமரத்தின் பக்கத்திற் சென்றதும் யாது செய்யவேண்டும்?**

புருஷர்கள் அஷ்டாங்க நமஸ்காரமும், பெண்கள் பஞ்சாங்க நமஸ்காரமும் செய்தல்வேண்டும்.

**212. அஷ்டாங்க நமஸ்காரமாவது யாது?**

தலை, செவியிரண்டு, கையிரண்டு, புஜங்களிரண்டு மோவாய்க்கட்டை ஆகிய எட்டு அவயவங்களும் பூமியிற் படும்படி வணங்குதலாம்.

**213. பஞ்சாங்க நமஸ்காரமாவது யாது?**

*தலை, கையிரண்டு, முழந்தாளிரண்டு ஆகிய ஐந்து அவயவங்களும் பூமியிற்படும்படி நமஸ்கரித்தலாம்.*

**214. கொடி மரத்தைக் கண்டதும் யாது நினைத்தல் வேண்டும்?**

*இறைவனை யடைந்தவர் அழிவற்ற ஆனந்தத்தில் நிலைத்திருப்பர் என நினைந்து கொடிமரத்தை சூக்ஷ்ம லிங்கமாக எண்ணி வணங்கவேண்டும்.*

**215. கொடிமர தரிசனம் செய்த பிறகு யாது செய்தல் வேண்டும்?**

*மூலமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு மூன்றுதரம் வலம்வந்து வணங்கி உட்செல்லுவதற்காகப் பலி பீடத்தின் அருகிற் செல்லவேண்டும்.*

**216. பலிபீடத்தின் அருகில் சென்று யாது செய்தல் வேண்டும்?**

*நம்மிடமிருக்கும் காமம், குரோதம், உலோபம், மோஹம், மதம், மாச்சரியம் என்பவற்றைப் பலி கொடுத்ததாக உறுதி பண்ணவேண்டும்.*

**217. பிரதக்ஷணம் செய்யும்போது யாது நினைத்தல் வேண்டும்?**

ஐந்து பிராகாரங்களையும் அன்னமயகோச முதலிய பஞ்சகோசங்களாக மதித்து ஒவ்வொரு கோசத்திலும் ஆன்மா உழன்று தெளிந்து அதை விட்டு மேலே செல்வதாக நினைக்கவேண்டும். இங்ஙனம் ஐந்து பிராகாரங்களையும் கடந்தால் கடவுளது சாயுச்ய பதத்தை அடையலாம் என்னும் உண்மையையும் உணர்தல் வேண்டும்.

**218. கோயிலில் விநாயகரது ஸ்தானம் எது?**

கன்னிமூலை.

**219. விநாயகர் சந்நிதியில் எப்படி வணங்க வேண்டும்?**

வலக்கையை இடக்கையின் முன் வைத்து வலக்கையால் இடப்புறத்திலும் இடக்கையால் வலப் புறத்திலும் மண்டையில் மூன்றுமுறை குட்டுகளிட்டு, வலக்கையால் இடக்காதையும் இடக்கையால் வலக்காதையும் பிடித்துக்கொண்டு மூன்றுமுறை தோப்புக்கரணமிட்டு விநாயகர் தோத்திரம் கூறி வணங்குதல் வேண்டும்.

**220. ஏன் இவரை இவ்வாறு வணங்குதல் வேண்டும்?**

ஒரு குற்றவாளி தான் செய்த குற்றத்திற்குத் தண்டனை தானே விதித்துத் தானே அனுபவித்தல் போலக் கடவுளின் சமீபத்தில் செல்லுவதற்குத் தகுதி

யில்லாதபடி குற்றங்கள் நிறைந்த மக்கள் தாம் செய்த குற்றத்திற்குத் தாமே தண்டனை செய்து அனுபவிக்க மேற்கூறியவாறு செய்து, மேல் அவ்விதம் குற்றங்கள் செய்யமாட்டோம் என உறுதி செய்து கொள்ளுகிறார்கள். கடவுளின் அருள் கிடைப்பதற்கு விக்கினங்கள் ஏற்படுமாறு விக்கினங்களை நீக்கி அருளவேண்டும் எனவும் விக்கினேஸ்வரரை வணங்குகிறார்கள்.

### 221. இவர்முன் தேங்காய் விடலை எறிவதேன்?

நாம் செய்த குற்றங்கள் பாவங்களாக உருண்டு திரண்டு உருக்கொண்டு நிற்கின்றதாகத் தேங்காயைப் பாவித்து, அது விநாயகர் வணக்கத்தால் உடைந்து சிதறினது என்று நினைந்து விடலையெறிந்து மேல் அவ்வகைப் பாவங்கள் செய்யாதிருப்போம் என நினைந்து கொள்ளுதற்காம்,

### 222. விநாயகர் வணக்கம் முடிந்தபின் யாது செய்தல் வேண்டும்?

துவாரபாலக விக்ரகங்களின் முன் சென்று, "அடியேன் உட்சென்று இறைவனை வணங்குவதற்கு அநுமதி செய்தருளும்" என்று வேண்டிக்கொண்டு சந்நிதியிற் சென்று நின்று இறைவனை வணங்கித் தோத்திரப் பாக்கள் கூறுதல்வேண்டும். இங்குத் தேங்காய், பழம் முதலிய நிவேதனப் பொருள்களைக் கொடுத்து நிவேதிக்கச் செய்யலாம்; அருச்சனையும் செய்விக்கலாம். கற்பூர தரிசனம் செய்து பிரசாதம் வாங்கித் தரித்துக்

கொண்டு மூலஸ்தான மூர்த்தியை நன்றாய் மனதில் பதிய வைத்து எலும்புகளெல்லாம் நெக்கு நெக்குருகக் கண்ணீர் அருவிபோலப் பாயக் கசிந்துருகித் துதித்து வெளிவரல் வேண்டும். பின், அம்பிகை சந்நிதியிலும் அவ்வாறே வணங்கல் வேண்டும்.

**223. அதன்பின் யாது செய்தல் வேண்டும்?**

உட்பிராகாரங்களிலிருக்கும் ஒவ்வொரு மூர்த்தியையும் வணங்கிக்கொண்டே வலம் வரல் வேண்டும்.

**224. தக்ஷிணாமூர்த்திமுன் எவ்வாறு வணங்க வேண்டும்?**

தக்ஷிணாமூர்த்தி விக்ரகம் கல்லாலின்கீழ், சனகர் முதலிய நால்வருக்கு உபதேசஞ்செய்ய எழுந்தருளிய குருமூர்த்தமாகும். அவர், தம் சுட்டுவிரலைப் பெருவிரலோடு சேர்த்து மற்ற மூன்று விரல்களையும் அகல விட்டுக் காட்டும் சின்முத்திரையால் உயிர்கள் ஆணவம், கன்மம், மாயையாகிய மூன்றினையும் அகற்றிக் கடவுளை அடைதல்வேண்டும் என உபதேசிக்கின்றார். ஆதலால் அவர் சந்நிதியடைந்த நாம் இறைவனைக் குருவாய்ப் பாவித்து வணங்கவேண்டும். அவர் உபதேசிக்கின்றபடி ஆணவம், கன்மம், மாயைகளை அகற்றி இறைவனை யடைய முயலுதல் வேண்டும்.

**225. சண்டேசுரரை எவ்வாறு வணங்குதல் வேண்டும்?**

சண்டேசுரர் கோயில், கோயிலின் இடப்பக்கத்தில் சிறியதோர் இடைவழிவிட்டு அமைக்கப்பட்டிருக்கும். மூலஸ்தானத்தில் சாத்திய மாலையும் நைவேத்திய மிச்சமுமே இங்கு பூஜைக்குரியன. இவர் கடவுள் திருவருள்பெற்ற அடியார். இவர் எப்போதும் சிவத் தியானம் செய்துகொண்டே இருக்கிறார். இவரைக் கோயில்தரிசனம் அனைத்தும் முடிந்த பிறகு வணங்குதல் வேண்டும். சிவத் தியானத்திலிருக்கும் இவரைத் திரும்ப மூன்றுமுறை கையால் கொட்டி அவர் நம்மைப் பார்ப்ப தாய் மதித்துச் சிவதரிசன பலனைத் தருமாறு பிரார்த் திக்கவேண்டும்.

**226. சனீஸ்வர வணக்கமும் கோயிலில் வைத் திருப்பதேன்?**

"சனீஸ்வர பகவானே உனைத்தொழுவேன், எனைத் தொடாதே" என வேண்டித் தீவினை நம்மை அணுகா திருக்கப் பிரார்த்தனை செய்வதாம்.

**227. நவக்கிரக ஆராதனை எதற்கு?**

கோள்கள் மனிதர்களுக்கு அவர்கள் வாழ்நாளில் தீமையைச் செய்ய இருப்பின் அவற்றின் வலிமையைக் குறைத்தற்பொருட்டாம்.

**228. கோயில்வழிபாடனைத்தும் முடிந்த பிறகு யாது செய்தல் வேண்டும்?**

கொடிமரத்திற்குச் சற்றுதூரம் விலகியிருந்து மூல மந்திரத்தை இருபத்தெட்டு முறையோ அதற்கு மேற்படவோ ஜபித்து, தாங்கண்ட இறைவன் திருவுருவத்தை நினைந்து, எங்கு சென்றிருந்து தியானிப்பினும் புறக்கண்ணால் கண்ட திருவுருவம் அகக்கண்ணால் காணும்படி ஆக்கிக்கொள்ளுதல் வேண்டும்.

**229. சிவத் தியானத்துக்குரிய மூலமந்திரம் எது?**

"ஓம் நமசிவாய" என்பதாம். இதைப் பஞ்சாக்ஷரம் எனவுங் கூறுவர்.

**230 விஷ்ணு தியானத்துக்குரிய மூலமந்திரம் எது?**

"ஹரி ஓம் நமோ நாராயணாய" என்பதாம் இதை அஷ்டாக்ஷரம் எனவும் கூறுவர்.

**231. சுப்பிரமணிய தியானத்துக்குரிய மூல மந்திரம் எது?**

"ஓம் சரவணபவாய" என்பதாம். இதனை ஷடாக்ஷரம் எனவுங் கூறுவர்.

## 21. தோத்திரமாலை.

**232. விநாயகர் திருமுன் சொல்லவேண்டிய பாட்டுக்கள் எவை?**

திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன மெய்ப்பதம போற்றுவாம். 1

வானுலகு மண்ணுலகும் வாழ மறைவாழப்
பானமைத ந செய்யதமிழ் பார்மிசை விளங்க
ஞான..த வைந்துகர மூன்றுவிழி நால்வாய்
யானைமுக னைப்பரவி யஞ்சலிசெய் ..ற்..ாம். 2

பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே. 3

**233. சிவசந்நிதியிற் சொல்லவேண்டிய தோத்திரங்கள் எவை?**

தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரியபுராணம் முதலியனவாம்.

**திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் தேவாரம்.**

தோடுடையசெவி யன்விடையேறியோர் தூவெண்மதிசூடிக்
காடுடையசுட லைப்பொடிபூசியென னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனைநாட்பணிந் தேத்தவருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

## திருநாவுக்கரசுநாயனார் தேவாரம்

சொற்றுணை வேதியன் சோதிவானவன்
பொற்றுணை திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணை பூட்டியோர் கடலில் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சி வாயவே.

எல்லா வுலகமு மானாய் நீயே
ஏகம்ப மேவி யிருந்தாய் நீயே
நல்லாரை நன்மை அறிவாய் நீயே
ஞானச் சுடர்விடக்காய் நின்றாய் நீயே
பொல்லா வினைகள் அறுப்பாய் நீயே
புகழ்ச்சேவடி யென்மேல் வைத்தாய் நீயே
செல்வாய செல்வந் தருவாய் நீயே
திருவையா றகலாத செம்பொற் சோதீ.

திருவேயென் செல்வமே தேனே வானோர்
செழுஞ்சுடரே செழுஞ்சுடர்நற் சோதீ மிக்க
உருவேயென் னுறவேயென் னூனே யூனின்
உள்ளமே யுள்ளத்தி னுள்ளே நின்ற
கருவேயென் கற்பகமே கண்ணே கண்ணிற்
கருமணியே மணியாடு பாவாய் காவாய்
அருவாய வல்வினைநோ யடையா வண்ணம்
ஆவடுதண் டுறையுறையும் அமர ரேறே.

## சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரம்

பித்தா பிறைசூடி பெருமானே யருளாளா
எத்தான் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை
வைத்தாய் பெண்ணைத் தென்பால்வெண்ணெய் நல்லூரருட்
டுறையுள்
அத்தாவுனக் காளாயினி யல்லே னெனலாமே.

### திருவாசகம்

மெய்தா னரும்பி விதிர்விதிர்த்துன் விரையார் கழற்கென்
கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பியுள்ளம்
பொய்தான் தவிர்ந்துன்னைப் போற்றிசயசய போற்றியென்னுங்
கைதா னெகிழவிடே னுடையா யென்னைக் கண்டுகொள்ளே.

### திருவிசைப்பா

ஒளிவளர் விளக்கே யுலப்பிலா வொன்றே
உணர்வுசூழ் கடந்ததோ ருணர்வே
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே
சித்தத்துள் தித்திக்குந் தேனே
அளிவள ருள்ளத் தானந்தக் கனியே
அம்பல மாடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
தொண்டனேன் விளம்புமா விளம்பே.

### திருப்பல்லாண்டு

மிண்டு மனத்தவர் போமின்கள் மெய்யடி
யார்கள் விரைந்து வம்மின
கொண்டுங் கொடுத்தும் குடிகுடி யீசற்காட்
செய்மின் குழாம புகுந்(து)
அண்டங் கடந்த பொருளள வில்லதோ
ரானந்த வெள்ளப் பொருள
பண்டு மின்று மென்று முள்ள பொருளென்றே
பல்லாண்டு கூறுதுமே.

### பெரியபுராணம்

அண்ண லேயெனை யாண்டுகொண் டருளிய அமுதே
விண்ணி லேமறைந் தருள்புரி வேதநா யகனே

கண்ணி ருல் திருக் கயிலேயி லிருந்தநின் கோலம்
நண்ணி நான்றொழ நயந்தருள் புரிஎனப் பணிந்தார்.

இவைபோன்ற பல பாசுரங்கள் "அடங்கன் முறை" "திருவாசகம்" முதலிய நூல்களிலிருந்து படித்தறியத் தக்கனவாம்.

**234. திருமால் அல்லது மஹாவிஷ்ணு திருமுன் பாடவேண்டிய பாட்டுக்கள் எவை?**

குலந்தரும்; செல்வம் தந்திடும்; அடியார்
படுந்துய ராயின வெல்லாம்
நிலந்தரம் செய்யும்; நீள்விசும் பருளும்;
அருளொடு பெருநிலம் அளிக்கும்;
வலந்தரும்; மற்றுந் தந்திடும்; பெற்ற
தாயினும் ஆயின செய்யும்;
நலந்தரும் சொல்லை நான்கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்.

இதுபோன்ற பல பாக்கள் நாலாயிர திவ்யபிரபந்தம் முதலிய நூல்களிலிருந்து படித்தறியத் தக்கனவாம்.

**235. உமாதேவியார் திருமுன் பாடவேண்டிய பாட்டுக்கள் எவை?**

சுரும்புமுரல் கடிமலர்ப்பூங் குழல்போற்றி
உத்தரியத் தொடிததோள் போற்றி
கரும்புருவச் சிலைபோற்றி கவுணியர்க்குப்
பால்சுரந்த கலசம் போற்றி

இரும்புமனங் குழைந்தென்னை யெடுத்தாண்ட
அங்கயற்க ணம்பி ராட்டி
அரும்புமிள நகைபோற்றி யாரணநூ
புரஞ்சிலம்பு மடிகள் போற்றி.

*என்பதுவும் இதுபோன்ற பிறவுமாம்.*

**236. நடராஜர் திருமுன் கூறவேண்டிய திருப் பாட்டுக்கள் எவை?**

குனித்த புருவமுங் கொவ்வைச் செவ்வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்தபொற் பாதமும் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே.

*என்பதும் பிறவுமாம்.*

**237. தக்ஷிணாமூர்த்தி துதி யாது?**

மும்மலம் வேறுபட் டொழிய மொய்க்குயிர்
அம்மலர்த் தாள்நிழல் அடங்கும் உண்மையைக்
கைம்மலர்க் காட்சியிற் கருவ நல்கிய
செம்மலை மனமுளஞ் சிந்தியா தரோ.

**238. முருகன் திருமுன் பாடுதற்குரிய பாடல்கள் யாவை?**

*திருமுருகாற்றுப்படை, கந்தர் கலிவெண்பா, கந்தரநுபூதி, கந்தரலங்காரம், திருப்புகழ் முதலிய நூல்களிலுள்ள பாடல்களாம்.*

பன்னிரு கரத்தாய் போற்றி பசும்பொன்மா மயிலாய் போற்றி
முன்னிய கருணையாறு முகப்பரம் பொருளே போற்றி
கன்னியர் இருவர் நீங்காக் கருணை வாரிதியே போற்றி
என்னிரு கண்ணே கண்ணுள் இருக்குமா மணியே போற்றி,

என்பதுவும் இதுபோன்ற பிறவுமாம்.

## 239. திருநந்திதேவர் துதி யாது?

அங்கணன் கயிலைகாக்கும் அகம்படித் தொழின்மை பூண்டு
நங்குரு மரபிற் கெல்லாம் முதற்குரு நாதனாகி
பங்கயந் துளவநாறும் வேத்திரப் படை பொறுத்த
செங்கையெம் பெருமானந்தி சீரடிக் கமலம் போற்றி.

## 240. சண்டேசுரர் துதி யாது?

பொன்னங் கடுக்கை முடிவேய்ந்த புனிதற்கமைக்கும்
பொருளன்றி
மின்னுங் கலனுடைகள் பிறவும் வேறுதனக்கென் றமையாமே
மன்னுந் தலைவன் பூசனையின் மல்கும் பயனை அடியார்கள்
துன்னும்படி பூசனைகொள்ளும் தூயோ னடித்தாமரை
தொழுவோம்.

## 241. சரஸ்வதி துதி யாது?

பழுதகன்ற நால்வகைச்சொல் மலரெடுத்துப்
பத்திபடப் பரப்பித் திக்கு
முழுதகன்று மணந்துசுவை யொழுகியணி
பெறமுக்கண் மூர்த்தி தாளில்
தொழுதகன்ற அன்பெனும்நார் தொடுத்து அலங்கல்
சூட்டவரிச் சுரும்புந் தேனுங்
கொழுதகன்ற வெண்டோட்டு முண்டகத்தாள்
அடிமுடிமேற் கொண்டு வாழ்வாம்.

## 242. திருஞானசம்பந்தர் துதி யாது?

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.

பண்டைவல் வினையினால் பாயு டுத்துழல்
குண்டரை வென்றுமுன் கூடல் வைகியே
வெண்திரு நீற்றொளி விளங்கச் செய்திடு
தண்டமிழ் விரகனமெய்த் தாள்கள் போற்றுவாம்.

## 243. திருநாவுக்கரசர் துதி யாது?

பொய்யுரை நூல்சில புகலுந் தீயமண்
கையர்கள் பிணித்துமுன் கடல கத்திடு
வெய்யகல் தோணியாய் மிதப்ப மேற்படு
துய்யசொல் லரசர்தாள் தொழுது போற்றுவாம்.

அறப்பெருஞ் செல்விபாகத் தண்ணலஞ் செழுத்தாலஞ்சா
மறப்பெருஞ் செய்கை மாறா வஞ்சக ரிட்ட நீல
நிறப்பெருங் கடலும் யார்க்கும் நீந்துதற் கரிய ஏழு
பிறப்பெனுங் கடலும்நீத்த பிரானடி வணக்கஞ்செய்வாம்.

## 244. சுந்தரர் துதி யாது?

இருமுதலை யடைந்துநரை முடிப்பனைய
  ஆவணமொன் றேந்திப் போந்த
ஒருமுதலை நவநீத புரியானை
  வழக்கேற்றி உரைத்த கோவை

அருமறைசை சூழவிதா மறைபொருந்தா
கனிவாயா லமுதப் பாடல்
தருமுதல்வ னடிபணிந்து கருமுதல்வ
ம்வரிசை குருந் தன்னைநினைவோமே.

ஒருமணத்தைச் சிதைவுசெய்து வலியவந்தாட்
டாட்கொண்ட உவனைக் கொள்வோமே
இருமணத்தைக் கொண்டருளிப் பணிகொண்ட
வல்லாளன் எல்லா முய்யப்
பெருமணச்சீர்த் திருத்தொண்டத் தொகைவிரிந்த
பேரருளின் பெருமா னென்றுந்
திருமணக்கோ லப்பெருமாள் மறைப்பெருமாள்
எமதுகுல தெய்வ மாமால்.

## 245. மணிவாசகர் துதி யாது?

எழுதருமறைகள் தேறா இறைவனை யெல்லிற் கங்குற்
பொழுதறு காலத்தென்றும் பூசனை விடாது செய்து
தொழுதகை தலைமேலேறத் துளும்புகண் ணீருள் மூழ்கி
அழுதடி யடைந்த வன்ப னடியவர்க் கடிமை செய்வாம்.

சிற்றம் பலக்கோவைத் தேன்சொரியுஞ் செம்முகிலை
மற்றெருப் பிலாததிரு வாசகத்தின் வாரிதியைக்
கற்றைச் சடையான் கருத்துருக்குங் காதலனைக்
கொற்றத் திருவாத வூரனைக்கை கூப்புதுமே.

## 246. அறுபத்துமூவர் துதி யாது?

தத்து முதெயில் மூன்றுந் தழலெழ
முத்து மூரன் முகிழுத்த நிராமய
சித்து மூர்த்திதன் தாளிணை சேரறு
பத்து மூவர் பதமலர் போற்றுவாம்.

களின் புற்று அழியும்படியாகப் பசிய கோரைப்புற்களைக் கரிய கடாக்கள் கொம்பினாலே குத்துதலும், அவலையிடிக் கும் உலக்கை ஓசையைக் கேட்ட கிளிகள் அதனைப் பகை யாக நினைத்து அஞ்சுதலும், சிறு தேர்களை உருட்டித் திரிந்த பிள்ளைகள் தங்களைப்பு நீங்கும்படியாகச் செவிலித் தாயருடைய பாலை நிறையவுண்டு படுக்கையிலே துயில் கொள்ளுதலும், ஆலையாரவாரிக்கும் இடையறாத ஓசையை யுடைய புகைசூழ்ந்த கொட்டில்களில் கருப்பஞ் சாற்றைக் கட்டியாகக் காய்ச்சுதலும், நீண்ட கோடைக் காலத்தும் குளங்களில் நீர் வற்றாதிருத்தலும், நீராடு மக்களிர் நீருண் ணுந் துறையிலே போகவிட்டுப்போன மகரக்குழையினை சிச்சிலி இரையெனக் கருதி எடுத்துக் கொண்டு பறவை கள் நிறைந்த பனை மடலிற் போகாது அந்தணர் யாகசாலை யில் நட்ட யூபத்தின் மேலே இருத்தலும், மேற்றிசைக் கண்ணுள்ள குதிரைகளையும் வடதிசைக் கண்ணுள்ள நுகரப்படு பொருட்களையும் கொண்டுவந்து தரும் மரக் கலங்கள் கடற்கரையிலே சூழ்ந்து கிடத்தலும், எருதுக ளுடன் பசுக்கள் அணுகாத படியாக மேழகக்கிடாயோடே நாயும் சுழன்று திரிதலும், கள்ளுக் கடைகளின் வாயிலிலே பசிய கொடிகள் அசைந்து கொண்டிருத்தலும், ஆண்பன் றிகள் புணர்ச்சிக் கருத்தால் பெண்பன்றிகளுடனே போ காவண்ணம் குழிகளிலே விட்டு நெல்லை இடித்த மா உண வைத் தின்ன வைத்து வளர்த்தலும், கலங்கரை விளக்கம் விண்ணைத் தீண்டும்படியாக உயர்ந்திருத்தலும், வழிச் செல்வோர் தம்பசிதீரும்படி சோற்றை யாக்குகின்ற பானை அசைந்து அடுப்பினின்றும் விழும்படியாகத் தென்னையி லிருந்து காய் கீழே விழுதலும், ஞாயிற்றின் கதிர் நுழைந் தறியாத இலைநெருங்கிய இளமரக்காவில் குயில்கள்

யாம் செய்யாதிருக்கத் திருவருள் புரிவாய்! பிறப்பெனும் பெருநோய் பிடித்திடா தெமக்குச் சிறப்புடன் முத்தி சீருடன் அருளே.

திருச்சிற்றம்பலம்

## நாமாவளி

நமப்பார்வதீபதயே — ஹரஹர மஹாதேவா
கோவிந்தநாம ஸங்கீர்த்தனம் — கோவிந்தா கோவிந்தா
சித்ஸபேசா — சிவசிதம்பரம்.
தென்னாடுடைய சிவனேபோற்றி –
எந்நாட்டவர்க்கும் இறைவாபோற்றி.

| எண். | | வருஷம். |
|---|---|---|
| 7. | சிவப்பிரகாசக்கட்டளை ஆங்கிலத்துடன் | 1932 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1939 |
| 18. | 23-வது மகா சந்நிதானத்தின்மீது பலர் பாடிய தோத்திரப் பாடல்கள் | 1933 |
| 19. | திருத்துருத்திப் புராணம் மூலமும் வசனமும் | ,, |
| 20. | ஞானசரிதை | 1943 |
| 21. | முத்தி நிச்சயம் சிற்றுரையுடன் | ,, |
| 22. | அறிவானந்த சமுத்திரம் | ,, |
| 23. | பண்டாரமும்மணிக்கோவை குறிப்புரையுடன் | 1937 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 24. | இந்துமத பாலபாடம் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1949 |
| | ,, (மூன்றாம் பதிப்பு) | 1953 |
| 25. | சிதம்பரச் செய்யுட்கோவை உரையுடன் | ,, |
| 26. | திருவையாற்றுத் தலமகிமைச் சுருக்கம் | ,, |
| 27. | கிளிவிடு தூது | 1937 |
| 28. | திருமுலைப்பால் சிறப்பு | 1939 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1941 |
| 29. | பதி பசு பாசத்தொகை | 1940 |
| 30. | ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிகர் நான்மணிமாலை | ,, |
| 31. | திருபுவனத் தலமகிமைச் சுருக்கம் | ,, |
| 32. | கீர்த்தித் திருவகவல் | 1941 |
| 33. | ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள் வரலாறும் பாசுரங்களும் | ,, |
| 34. | வைத்தீசுவரன்கோயில் தேவாரம் திருப்புகழ் | ,, |
| 35. | திருத்தொண்டத் தொகையும் அசபாநடனப் பதிகமும் | ,, |
| 36. | குங்குலியக்கலய நாயனார் அன்பின் திறம் | ,, |

| எண். | | வருஷம். |
|---|---|---|
| 37. | திருக்கடவூர்த் தேவாரம் திருப்புகழ் | 1941 |
| 38. | திருவையாற்றுத் தேவாரம் திருப்புகழ் | ,, |
| 39. | புள்ளிருக்குவேளூர்ப் புராணம் | ,, |
| 40. | சித்தாந்த சைவ வினாவிடை | ,, |
| | ,, (ஆதீன இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 41. | நால்வர் சரித்திரமும் அற்புதத் தேவாரத் திரட்டும் | 1944 |
| 42. | ஆச்சாள்புரத் தலவரலாறு | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1943 |
| 43. | திருவையாற்றுத் தலவரலாறு | 1941 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1943 |
| | ,, (மூன்றாம் பதிப்பு) | 1948 |
| 44. | சுப்பிரமணியர் திருவவதாரமும் கந்தர்கலி வெண்பாவும் | 1941 |
| 45. | தருமபுர ஆதீனம் மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு | ,, |
| 46. | சிவபூஜாவிதி | ,, |
| 47. | சைவானுட்டானவிதி | ,, |
| 48. | திருக்கடவூர் உலா குறிப்புரையுடன் | ,, |
| 49. | திருப்பாடல்கள் | 1942 |
| 50. | விநாயகர் அகவல்கள் | ,, |
| 51. | சீகாழித் தலவரலாறு | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1950 |
| 52. | மெய்கண்டசாத்திரம் மூலம் | 1942 |
| 53. | திருக்கற்குடித் தலவரலாறு | 1943 |
| 54. | நீதிநெறிவிளக்கம் உரைவளத்துடன் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1949 |
| 55. | திருவாரூர் நான்மணிமாலை மூலமும் வசனமும் | 1943 |

| எண். | | வருஷம். |
|---|---|---|
| 56. | சகலகலாவல்லிமாலை உரையுடன் | 1943 |
| 57. | கந்தரனுபூதி | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1945 |
| 58. | குற்றாலத் தலவரலாறு | 1943 |
| 59. | குறுக்கைத் தலவரலாறு | ,, |
| 60. | திருபுவனத் தலவரலாறு | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1948 |
| 61. | திருக்கடவூர்த் தலவரலாறு | ,, |
| 62. | புள்ளிருக்குவேளூர்த் தலவரலாறு | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1949 |
| 63. | திருப்பனந்தாள் தலவரலாறு | 1943 |
| 64. | 24-வது மகாசந்நிதானம் பத்தாண்டு ஆட்சிமலர் | ,, |
| 65. | அப்பர் சுவாமிகள் புராணம் C. K. S. விரிவுரையுடன் | 1944 |
| 66. | மெய்கண்டான் சித்தாந்த மகாநாடு திருமுறைத் திருநாள் நிகழ்ச்சிகள் | ,, |
| 67. | சிவஞானபோதச் சூத்திரக் கட்டுரை | ,, |
| 68. | ஞானசம்பந்தர் வழங்கிய ஞானவுரை | 1945 |
| 69. | சிவப்பிரகாசம் ஆங்கில மொழிபெயர்ப்புடன் | ,, |
| 70. | தருமபுர ஆதீன நூல்நிலையப் புத்தகப்பட்டி | ,, |
| 71. | புள்ளிருக்குவேளூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1946 |
| 72. | பஞ்சாவரணத் தோத்திரங்கள் | 1945 |
| 73. | சிதம்பரத்துத் திருப்பதிகங்கள் | ,, |
| 74. | தக்ஷிணாமூர்த்தி திருவருட்பா | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | ,, |
| 75. | திருவேட்களத் திருப்பதிகங்கள் | ,, |
| 76. | திருநெல்வாயில் திருப்பதிகம் | ,, |

| எண். | | வருஷம். |
|---|---|---|
| 99. | சீகாழித் திருப்பதிகங்கள் | 1946 |
| | ,, (இரண்டாம்பதிப்பு) | 1948 |
| 100. | திருக்கோலக்கா திருப்பதிகம் | 1946 |
| 101. | திருக்குருகாவூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 102. | திருச்சாய்க்காட்டுத் திருப்பதிகம் | ,, |
| 103. | திரும்பல்லவனீச்சரத் திருப்பதிகம் | ,, |
| 104. | திருவெண்காட்டுத் திருப்பதிகங்கள் | ,, |
| 105. | கீழைத்திருக்காட்டுப்பள்ளித் திருப்பதிகம் | ,, |
| 106. | சித்தாந்தத்திரயம் ஆங்கில மொழிபெயர்ப்புடன் | ,, |
| 107. | ஸ்ரீகண்டன் ஓர் சிறு நாடகம் | ,, |
| 108. | திருமூலப்பால் திருவிழாச் சிறப்பு | ,, |
| 109. | முத்தி நிச்சயப்பேருரை என்னும் வெள்ளியம்பலவாணமாபாடியம் | 947 |
| 110. | மிருகேந்திரம் தமிழ் மொழிபெயர்ப்புடன் | 1946 |
| 111. | நடராஜ சதகம் | ,, |
| 112. | உண்மைவிளக்கம் ஆங்கில மொழிபெயர்ப்புடன் | ,, |
| 113. | திருக்கண்ணார்கோயில் திருப்பதிகம் | ,, |
| 114. | சுவாமிநாதசுவாமி தோத்திரங்கள் | ,, |
| 115. | திருநள்ளாற்றுத் திருப்பதிகங்கள் | ,, |
| 116. | திருக்கடைமுடித் திருப்பதிகம் | ,, |
| 117. | திருப்பறியலூர்த் திருப்பதிகம் | ,, |
| 118. | திருவிளநகர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 119. | திருநின்றியூர்த் திருப்பதிகம் | ,, |
| 120. | திருஆக்கூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 121. | திருக்கடவூர்மயானத் திருப்பதிகங்கள் | ,, |
| 122. | மாயூரத் திருப்பதிகங்கள் | ,, |
| 123. | திருநீடூர்த் திருப்பதிகங்கள் | ,, |

| எண். | | வருஷம். |
|---|---|---|
| 124. | திருப்புன்கூர்த் திருப்பதிகங்கள் | 1947 |
| 125. | திருஅன்னியூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 126. | திருத்தருமபுரத் திருப்பதிகம் | ,, |
| 127. | ஆலயவழிபாடு: தோத்திரங்களுடன் | ,, |
| 128. | திருவேள்விக்குடித் திருப்பதிகங்கள் | ,, |
| 129. | திருஎதிர்கொள்பாடித் திருப்பதிகம் | ,, |
| 130. | திருமயிலாப்பூர்த் திருப்பதிகம் | ,, |
| 131. | திருஒற்றியூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 132. | திருஞானசம்பந்தர் புராணம் முதல் நூறுபாடல்கள் C. K. S. விரிவுரையுடன் | ,, |
| 133. | திருமணஞ்சேரித் திருப்பதிகங்கள் | ,, |
| 134. | இருபா இருபஃது ஆங்கில மொழிபெயர்ப்புடன் | ,, |
| 135. | திருக்குறுக்கைத் திருப்பதிகம் | ,, |
| 136. | தருமபுர ஆதீனப் பாடசாலை ஆருவது ஆண்டு அறிக்கை | ,, |
| 137. | திருக்கருப்பறியலூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 138. | 25-வது மகாசந்நிதானம் முதலாண்டு ஆட்சி அறிக்கை | ,, |
| 139. | திருக்குரக்குக்காத் திருப்பதிகம் | ,, |
| 140. | திருஅஞ்சைக்களத் திருப்பதிகம் | ,, |
| 141. | திருப்பழமண்ணிப்படிக்கரைத் திருப்பதிகம் | ,, |
| 142. | திருவாழ்கொளிப்புத்தூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 143. | திருஓமாம்புலியூர்த் திருப்பதிகம் | ,, |
| 144. | சிவபோகசாரம் விரிவுரையுடனும் ஆங்கில மொழிபெயர்ப்புடனும் | ,, |
| 145. | திருக்கானாட்டுமுள்ளூர்த் திருப்பதிகம் | ,, |
| 146. | துள்ளிவருகுது வேல் | ,, |

| எண். | | வருஷம். |
|---|---|---|
| 147. | திருக்கடம்பூர்த் திருப்பதிகங்கள் | 1947 |
| 148. | திருஅவிநாசித் திருப்பதிகம் | ,, |
| 149. | திருமுருகன்பூண்டித் திருப்பதிகம் | ,, |
| 150. | திருவெம்பாவைத் திருப்பதிகம் விளக்கத்துடன் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1951 |
| 151. | திருவலஞ்சுழித் திருப்பதிகங்கள் | ,, |
| 152. | 25-வது மகாசந்நிதானம் இரண்டாவதாண்டு ஆட்சி அறிக்கை | 1948 |
| 153. | திருப்பந்தணைநல்லூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 154. | திருக்கஞ்சனூர்த் திருப்பதிகம் | ,, |
| 155. | திருக்கோடிகாத் திருப்பதிகங்கள் | ,, |
| 156. | திருவாப்பாடித் திருப்பதிகம் | ,, |
| 157. | சிவஞானசித்தியார் சுபக்கம் ஆங்கில மொழிபெயர்ப்புடன் | ,, |
| 158. | அபிராமி அந்தாதி விரிவுரையுடன் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 159. | திருச்சேஞ்ஞலூர்த் திருப்பதிகம் | 1948 |
| 160. | தருமபுர ஆதீனப் பண்டாரசாத்திரம் முதல் தொகுதி | ,, |
| 161. | நல்வழி | 1948 |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1953 |
| 162. | சுவாமிநாதன் பிரபாவம் | 1948 |
| 163. | திருந்துதேவன்குடித் திருப்பதிகம் | ,, |
| 164. | இன்பம் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | ,, |
| | ,, (மூன்றாம் பதிப்பு) | 1953 |
| 165. | அறுபத்துமூவர் | 1948 |
| 166. | திருவியலூர்த் திருப்பதிகம் | ,, |

| எண். | | வருஷம் |
|---|---|---|
| 167. | மெய்கண்ட நூற்பொருட் சிறப்பு | 1948 |
| 168. | திருக்கொட்டையூர்த் திருப்பதிகம் | ,, |
| 169. | திருஇன்னம்பர் திருப்பதிகம் | ,, |
| 170. | பழநி ஸ்ரீ தண்டாயுதபாணித் தோத்திரங்கள் | ,, |
| 171. | 25-வது மகாசந்நிதானம் மூன்றுவதாண்டு ஆட்சி அறிக்கை | ,, |
| 172. | திருப்பாதிரிப்புலியூர்த் திருப்பதிகம் | 1948 |
| 173. | திருப்புறம்பயத் திருப்பதிகம் | ,, |
| 174. | திருவிசயமங்கைத் திருப்பதிகம் | ,, |
| 175. | சைவத் திருமுறைகள் வரலாறு நூல் | ,, |
| 176. | அமைதி | ,, |
| 177. | திருவைகாவூர்த் திருப்பதிகம் | ,, |
| 178. | திருச்சிவபுரத் திருப்பதிகம் | ,, |
| 179. | மதுரைத் திருப்பதிகம் தலவரலாற்றுடன் | ,, |
| 180. | திருப்பரங்குன்றத் திருப்பதிகம் | ,, |
| 181. | திருவடகுரங்காடுதுறைத் திருப்பதிகம் | ,, |
| 182. | திருப்பழனத் திருப்பதிகம் | 1949 |
| 183. | திருக்குறள் கதைகள் ஐம்பது | ,, |
| 184. | சிதம்பரம் பதிகங்களுடன் | ,, |
| 185. | திருப்பெரும்புலியூர்த் திருப்பதிகம் | 1949 |
| 186. | 24-வது மகாசந்நிதானம் பத்தாண்டு விழா நிகழ்ச்சி | ,, |
| 487. | திருநெய்த்தானத் திருப்பதிகம் | ,, |
| 188. | திருக்கண்டியூர்த் திருப்பதிகம் | ,, |
| 189. | திருவாரூர் பதிகங்களுடன் ஆராய்ச்சிநூல் | ,, |
| 190. | திருவாலம்பொழில் திருப்பதிகம் | ,, |
| 191. | தாயுமானவர் பாடல் குறிப்புரையுடன் | ,, |
| 192. | ஆதீனக்கோயில்கள் கல்வெட்டுக்களுடன் | ,, |

| எண். | | வருஷம். |
|---|---|---|
| 193. | திருத்தொண்டர் கீதம் | 1949 |
| 194. | திருமழபாடித் திருப்பதிகங்கள் | ,, |
| 195. | திருமுருகாற்றுப்படையும் கோளறு திருப்பதிகமும் | ,, |
| 196. | ஆபதுத்தாரணர்மாலை அஷ்டோத்திர சதநாமங்களுடன் | ,, |
| 197. | திருப்பழூர்த் திருப்பதிகம் | ,, |
| 198. | அபிராமி அந்தாதி மூலம் | ,, |
| | ,, (இரண்டாம் பதிப்பு) | 1950 |
| 199. | திருக்கானூர்த் திருப்பதிகங்கள் | 1949 |
| 200. | திருஅன்பிலாலந்துறைத் திருப்பதிகம் | ,, |
| 201. | திருத்தினைநகர்த் திருப்பதிகம் | ,, |
| 202. | திருவாசகம் நூலாராய்ச்சி குறிப்புரைகளுடன் | ,, |
| 203. | தருமபுர ஆதீனப் பல்கலைக்கல்லூரி 3-வது ஆண்டு அறிக்கை | ,, |
| 204. | சிவாலய தத்துவமும் கும்பாபிஷேக மகத்துவமும் | ,, |
| 205. | திருமாந்துறைத் திருப்பதிகம் | ,, |
| 206. | தருமபுர ஆதீனப் பிரசார அறிக்கை | ,, |
| 207. | வாரவழிபாடு | ,, |
| 208. | திருவானைக்காத் திருப்பதிகங்கள் | ,, |
| 209. | சைவம் : ஆங்கிலக் கட்டுரைகள் | ,, |
| 210. | திருவிடைமருதூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 211. | தமிழ் இசை | ,, |
| 212. | திருவாவடுதுறைத் திருப்பதிகங்கள் | ,, |
| 213. | திருவீழிமிழலைத் திருப்பதிகங்கள் | 1950 |
| 214. | சிவராஜ்யா : ஆங்கிலக் கட்டுரைகள் | ,, |
| 215. | திருச்செம்பொன்பள்ளித் திருப்பதிகம் | ,, |

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 216. | கும்பகோணம் திருப்பதிகங்களுடன் | 1950 |
| 217. | திருவாரூர் மும்மணிக்கோவை C. K. C. விரிவுரையுடன் | ,, |
| 218. | திருக்கருகாவூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 219. | திருப்பாற்றுறைத் திருப்பதிகம் | ,, |
| 220. | முத்தமிழ் முழக்கம் : தமிழ்க்கட்டுரைகள் | ,, |
| 221. | திருப்பைஞ்ஞீலித் திருப்பதிகங்கள் | ,, |
| 222. | திருப்பாச்சிலாச்சிராமத் திருப்பதிகங்கள் | ,, |
| 223. | காசியாத்திரை | ,, |
| 224. | திருச்சிராப்பள்ளித் திருப்பதிகங்கள் | ,, |
| 225. | திருமூக்கீச்சரத் திருப்பதிகம் | ,, |
| 226. | திருஈங்கோய்மலைத் திருப்பதிகம் | ,, |
| 227. | திருவாட்போக்கித் திருப்பதிகம் | ,, |
| 228. | சைவத்தின் மறுமலர்ச்சி | ,, |
| 229. | திருக்கடம்பந்துறைத் திருப்பதிகம் | ,, |
| 230. | செந்தமிழ் முருகன் | ,, |
| 231. | திருப்பராய்த்துறைத் திருப்பதிகம் | ,, |
| 232. | 25-வது மகாசந்நிதானம் 4-வது ஆண்டு ஆட்சி அறிக்கை | ,, |
| 233. | திருக்கற்குடித் திருப்பதிகங்கள் | ,, |
| 234. | திருக்குறள்—அறத்துப்பால் உரைவளம் | ,, |
| 235. | திருஎறும்பியூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 236. | 25-வது மகா சந்நிதானம் 5-வது ஆண்டு ஆட்சி அறிக்கை | ,, |
| 237. | திருவெம்பாவையும் திருப்பள்ளியெழுச்சியும் | ,, |
| 238. | திருநெடுங்களத் திருப்பதிகம் | ,, |
| 239. | மலைத் திருக்காட்டுப்பள்ளித் திருப்பதிகம் | 1951 |
| 240. | திருஇரும்பூளைத் திருப்பதிகம் | ,, |

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 241. | திருவேதிகுடித் திருப்பதிகங்கள் | 1951 |
| 242. | திருத்தென்குடித்திட்டை திருப்பதிகம் | ,, |
| 243. | திருப்புள்ளமங்கைத் திருப்பதிகம் | ,, |
| 244. | திருக்கேத்தீச்சரம் : திருக்கோணமாமலைத் திருப்பதிகங்கள் | ,, |
| 245. | சச்சபுடவெண்பா (தாளசாத்திரம்) | ,, |
| 246. | திருச்சக்கரப்பள்ளித் திருப்பதிகம் | ,, |
| 247. | திருக்கோட்டூர்த் திருப்பதிகம் | ,, |
| 248. | திருப்பாலைத்துறைத் திருப்பதிகம் | ,, |
| 249. | தருமபுர ஆதீனம் 24-வது மகாசந்நிதானம் ஸ்ரீ-ல-ஸ்ரீ சண்முக தேசிக சுவாமிகள் மருத்துவ நிலயத் திறப்புவிழா நிகழ்ச்சி | ,, |
| 250. | அசபாநடனப் பதிகம் | ,, |
| 251. | திருச்சத்திமுற்றத் திருப்பதிகம் | ,, |
| 252. | திருப்பட்டீச்சரத் திருப்பதிகம் | ,, |
| 253. | திருச்சோற்றுத்துறைத் திருப்பதிகங்கள் | ,, |
| 254. | திருக்குறள் - பொருட்பால், உரைவளம் | ,, |
| 255. | திருஇராமேச்சரத் திருப்பதிகங்கள் | ,, |
| 256. | திருப்பூந்துருத்தித் திருப்பதிகள் | ,, |
| 257. | திருநாகேச்சரத் திருப்பதிகங்கள் | ,, |
| 258. | 25-வது மகா சந்நிதானம் 6-வது ஆண்டு ஆட்சி அறிக்கை | ,, |
| 259. | திருநல்லூர்த் திருப்பதிகங்கள் | ,, |
| 260. | நித்தியபூசாலக்ஷண சங்கிரகம் | ,, |
| 261. | திருஆவூர்ப் பசுபதீச்சரத் திருப்பதிகம் | ,, |
| 262. | திருபழையாறைவடதளித் திருப்பதிகம் | 1952 |
| 263. | திருத்தென்குரங்காடுதுறைத் திருப்பதிகங்கள் | ,, |
| 264. | திருநீலக்குடித் திருப்பதிகம் | ,, |

| எண் | | வருஷம் |
|---|---|---|
| 265. | திருஞானசம்பந்தர் அற்புதங்கள் அஷ்டோத்திரங்களுடன் | 1952 |
| 266. | திருவைகன்மாடக்கோயில் திருப்பதிகம் | ,, |
| 267. | திருநல்லம் திருப்பதிகம் | ,, |
| 268. | திருக்குறள் — காமத்துப்பால் உரைவளம் | ,, |
| 269. | திருவழுந்தூர்த் திருப்பதிகம் | ,, |
| 270. | திருக்கோழம்பத் திருப்பதிகம் | ,, |
| 271. | இராமேசுவர யாத்திரை | ,, |
| 272. | திருநனிபள்ளித் திருப்பதிகம் | ,, |
| 273. | தேவிமான்மியம் | ,, |
| 274. | ஆதீனப் பிரசார அறிக்கை | ,, |
| 275. | திருவலம்புரத் திருப்பதிகம் | ,, |
| 276. | சிவஞானசித்தியார் சுபக்கம் (மூலம்) | ,, |
| 277. | திருத்தலைச்செங்காட்டுத் திருப்பதிகம் | ,, |
| 278. | திருவேட்டக்குடித் திருப்பதிகம் | ,, |
| 279. | திருக்கோட்டாற்றுத் திருப்பதிகம் | ,, |
| 280. | திருஅம்பர்பெருந்திருக்கோயில் திருப்பதிகம் | ,, |
| 281. | திருஅம்பர்மாகாளத் திருப்பதிகம் | 1953 |
| 282. | திருமீயச்சூர்த் திருப்பதிகம் | ,, |
| 283. | திருமீயச்சூர்இளங்கோயில் திருப்பதிகங்கள் | ,, |
| 284. | 25-வது மகாசந்நிதானம் 7-வது ஆண்டு ஆட்சி அறிக்கை | ,, |
| 285. | திருத்திலதைப்பதித் திருப்பதிகம் | ,, |
| 286. | திருக்கருப்பறியலூர்த் தலபுராணச் சுருக்கம் | ,, |
| 287. | திருத்தெளிச்சேரித் திருப்பதிகம் | ,, |
| 288. | வேளூர் தேவஸ்தான அறிக்கை | ,, |
| 289. | திருப்பாம்புரத் திருப்பதிகம் | ,, |

| எண் | | வருஷம். |
|---|---|---|
| 290. | திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம் (முதல் திருமுறை) குறிப்புரையுடன் | 1953 |
| 291. | திருச்சிறுகுடித் திருப்பதிகம் | ,, |
| 292 | சிவபுராணம் | ,, |
| 293 | திருவன்னியூர்த் திருப்பதிகம் | ,, |
| 294. | திருக்கருவிலித் திருப்பதிகம். | ,, |
| 295. | திருப்பேணுபெருந்துறை திருப்பதிகம். | ,, |
| 296. | பரமாணுப் புராணம் | ,, |

# தருமபுர ஆதீனம் இயற்றிவரும் பணிகள்

1. தேவார பாடசாலை நிறுவித் தெய்வத் தமிழ் வளர்ப்பது.
2. சிவாகம பாடசாலை வைத்துத் திருக்கோயில் பூசை முறைகளைப் பயிற்றுவிப்பது.
3. சிவஞான நூல்களைத் தெளிவுற அச்சிட்டு வழங்குவது.
4. சமய நுணுக்கங்களை நூல்களாக வெளியிடுவது.
5. தலங்கள்தோறும் திருப்பதிகங்கள் உரையுடன் வெளியிடுவது.
6. அறிஞரைக்கொண்டு ஆலயம்தோறும் அறவுரை வழங்குவது.
7. பிரசார வாகனத்தின் மூலம் தமிழ்நாடெங்கும் சமயம் வளர்ப்பது.
8. ஆங்கிலக் கலாசாலையில் தமிழ்ப்பரிசு அமைப்பது.
9. ஆதீனக் கோயில்தோறும் பண்ணிசைத் தமிழ் வளர்ப்பது.
10. தமிழ்க் கல்லூரி நிறுவி வித்துவான் தேர்விற்கு அனுப்புவது.
11. வடமொழிக்கல்லூரிநிறுவி சிரோமணித்தேர்விற்கு அனுப்புவது.
12. ஏழிசையும் இனிதோங்க இசைப்பிரிவு அமைப்பது.
13. நூல் ஆராய்ச்சிகள் எழுதுவித்து வழங்குவது.

14. விஞ்ஞான மெய்ஞ்ஞான நூல்களை வெளியிட்டு வழங்குவது.

15. சமய நூல்களைத் தக்கமுறையில் வெளியிடுவது.

16. "ஞானசம்பந்தம்" என்னும் மாதப் பத்திரிகை வாயிலாகச் சமய உண்மைகளை அறிவுறுத்துவது.

17. சமயக் கூட்டங்களுக்குத் தக்கன செய்வது.

18. தமிழ்ப்பணி சமயப்பணி செய்பவர்க்கு உதவுவது.

19. தமிழ்நாட்டுத் தல வரலாறுகளை எழுதுவித்து வழங்குவது.

20. புத்தகசாலை அமைத்துப் பழந்தமிழ் நூல்களைப் பாதுகாப்பது.

21. நாடோறும் ஹரிஜன மாணவர்களுக்கு அன்னம் அளிப்பது.

22. பொருளும் புத்தகமும் அளித்து ஏழை மாணவர் களுக்கு உதவுவது,

23. மாயூரத்தில் பிரசவ ஆஸ்பத்திரி கட்டி உதவியது.

24. குடிமக்கட்கு அடிக்கடி எண்ணெய் முழுக்கும் அன்னமும் அளித்துவருவது.

25. காந்திநிதி, ஹரிஜன பண்டு, அகதிகள் நிவாரண நிதி, காசநோய் ஆஸ்பத்திரி உதவிநிதி முதலிய பற்பல பொது ஸ்தாபனங்கட்குப் பெருந்தொகை அளிப்பது முதலியன.

26. கூட்டுறவுப் பண்டகசாலை அமைத்தது.

27. ஸ்ரீ குருஞானசம்பந்தர் உயர்நிலைத் தொடக்கப் பள்ளி அமைத்து அறிவுப்பணி செய்தல்.

28. அரசாங்கத்தாரின் புதிய கல்வித் திட்டத்தின்படி ஓரியண்டல் ஹைஸ்கூல் அமைத்தது.

29. இலவச இசைக் கல்லூரி அமைத்து, சென்னைப் பல்கலைக் கழகம் நடத்தும் (Diploma) தேர்விற்கு அனுப்புவது.

30. இடங்கள்தோறும் திருநெறிய தெய்வத் தமிழ் மாநாட்டை நடத்திவருவது.

31. ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்தசுவாமிகள் திருவிழாவில் எல்லாச் சமயதத்துவங்களையும் எல்லோரும் எளிதில் உணர (Religious Congress) சமய மாநாடு நடத்துவது.

32. சேரிகளிலும், கிராமங்களிலும் சமயப்பிரசாரம் செய்வது. (Intensive Programme).

33. அநாதைச் சிறுவர்களுக்கு விடுதி அமைத்துப் பாதுகாத்துவருதல்.



## நால்வர் தோத்திரம்

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பி லணைந்தபிரா னடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்தொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

ஞானசம்பந்தம் பிரஸ், தருமபுரம். கா. 5000, 25-8-53.